# வேண்டுகோள்

திருப்பராய்த்துறையில் உள்ளூர் மாணவ மாணவிகளுக்காக என்று தபோவனம் நடத்திவரும் விவேகானந்த உயர்நிலைப்பள்ளி இதுகாறும் பழங்கால வேத பாடசாலை, அன்னசத்திரம் ஆகிய பழைய கட்டடங்களில் நடைபெற்று வந்தது. ஆண்டுதோறும் மராமத்து பண்ணிக்கொண்டே பள்ளி நடைபெற்று வந்தது. 6 முதல் 10ஆம் வகுப்பு வரை சுமார் 600 பிள்ளைகள் அதில் படித்து வருகிறார்கள். இதற்கு நல்ல கட்டடம் இது நாள்வரை கட்ட வசதிப்படாமலேயே நடந்துகொண்டிருந்தது. 1982 ஜனவரி மாதத்தில் இதற்கென்று 24 அறைகள் கொண்ட 3 மாடி கட்டடம் கட்டத் துவங்கியுள்ளோம். இந்தக் கட்டடம் பூர்த்தியானதும் இதை மேல்நிலைப்பள்ளியாக்கக் கருதியுள்ளோம். இதன் மூலம் பத்து மைல் சுற்று வட்டாரத்தில் சுமார் ஆயிரம் பிள்ளைகள் நல்ல கல்வியும் நல்ல வாழ்க்கைப் பயிற்சியும் பெறுவார்கள். இதன் உத்தேச செலவு ரூபாய் பத்து லட்சம் ஆகும். ஆயினும் இப்போதுள்ள கூலி, சிமெண்ட், கம்பி விலை ஏற்றங்களினால் இந்தக் கட்டடச் செலவு நாம் உத்தேசித்திருக்கிற திட்டத்தில் அடங்குவதாக இல்லை. இந்தத் திட்டத்திற்காக இப்போது நமக்குப் பொருள் வசதி தேவைப்படுகிறது. சேமிப்புப்பணம் வைத்துள்ளவர்கள் பேங்கில் டிபாஸிட் செய்வது போன்று இந்த நற்காரியத்திற்குக் கடன் தந்து உதவலாம். ரூபாய் 1000 மும் அதற்கு மேற்பட்ட தொகைகளும் ஏற்றுக்கொள்ளப்பெறும். அதற்கு பேங்க் டிபாஸிட் முறையில் மூன்று வருஷ கெடு போட்டு ரசீது வழங்கி நூற்றுக்கு வருஷம் ஒன்றுக்கு ஒன்பது வீதம் வட்டி செலுத்துவோம். மூன்று வருஷ கெடு போட்டிருப்பினும் இடையில் அவசரத் தேவையிருப்பின் எப்போது வேண்டுமானாலும் முதலும் வட்டியும் வாங்கிக்கொள்ளலாம். ஆகவேதான் டிபாஸிட்டின் கால அளவைக்கு ஏற்ற வட்டி விகிதம் போடாமல் எவ்வளவு காலத்திற்கானாலும் 9% வட்டி என்று நிர்ணயித்துள்ளது. ஆண்டுதோறும் வட்டி வாங்கிக் கொள்ளாவிட்டாலும், அடுத்த ஆண்டிற்கு வட்டி முதலுடன் சேர்ந்து அதுவும் வட்டி பெறுகிறது. ஆகவேதான் 9% வட்டி என்று நிர்ணயித்துள்ளது. பணம் அனுப்பும் முறை: ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் என்ற பெயரில் தாங்கள் அனுப்புகிற தொகைக்கு திருச்சியில் உள்ள பேங்குகளில் மாற்றத்தக்கதாக டிராப்ட் எடுத்து A/C Payee என்று கிராஸ் செய்து சாதாரணத் தபாலிலேயே இங்கு அனுப்பி வைக்கலாம். யார் பெயருக்கு ரசீது போட வேண்டுமோ அவரது தபால் விலாசம் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

திருப்பராய்த்துறையில் உள்ளூர் மாணவ மாணவிகளுக்கு இப்பள்ளிக் கட்டடம் அமைய வேண்டியது அவசியம். தொழில் துறையில் பெரிய தொழிற்சாலைகள் ஏற்படுவதற்குப் பங்காளர்கள் (share holders) முன் வருவது போன்று இதற்கு முதலிடு செய்பவர்களுக்கு மூன்று வருடங்களில் வட்டியும் முதலும் திரும்ப வந்து விடுகிறது; ஒரு ஸ்தாபனமும் உருவாகிறது. பணவசதி உள்ளவர்கள் இப்பள்ளிக் கட்டடம் உருவாக தபோவனத்தில் வட்டிக்குப் பணம் டிபாசிட் செய்து உதவ மனமுவந்து முன்வருவார்களாக.

சித்பவானந்த

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹூ கார்த்திகை மீ | ஆரம் 11 |
|---|---|---|

## பொருளடக்கம்

பக்கம்



## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா: ரூ. 150 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்ம சக்கரம் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட்செய்த ரூபாய் நூற்றைம்பதை யும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா: ரூ. 15 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா: மாத வருவாய் ரூ. 200 அல்லது ஆண்டு வருவாய் ரூ. 2400க்கும் குறைவாக உள்ளவர்கள் ஆண்டு சந்தா பதினைந்து செலுத்த இயலாது இருந்தால் ரூபாய் பத்து அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவிநிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்விக விஷயமாதலால் ரூ. 15 செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்தவேண்டாம்.

தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் உள்ள அரசாங்கப் பொது நூலகங்கள் அனைத்துக்கும் தர்ம சக்கரம் அன்பர்களின் உதவியால் தொடர்ந்து அனுப்பப்பெறு கிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப்பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம்.

உள்நாடு தனி இதழ் ரூ. 1-50 வெளிநாடு தனி இதழ் ரூ. 3-00

**உள்நாடு வருட சந்தா: ரூ. 15-00 வெளிநாடு வருட சந்தா: ரூ. 35-00**

# அந்தர்யோக விவரங்கள்

**மதுரை ஜில்லா—தேனியில் 30—11—83 புதன்கிழமை**

*இடம்:* ஸ்ரீ கணேச கந்தப்பெருமாள் ஆலயம், தியாகராஜ நகர்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்
*உணவு வசதி:* பகல் உணவுக்கு ரூ. 1-50 செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**கோவை ஜில்லா—சித்திரச்சாவடியில் 4—12—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த ஆச்ரமம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி:* பகல் உணவு ரூ. 1-50; மாலைச் சிற்றுண்டி ரூ. 1-00 நேரில் செலுத்தவும்.

**தென் ஆற்காடு ஜில்லா—அவலூர்ப்பேட்டையில் 4—12—83 ஞாயிறு**

*இடம்:* அகத்தீஸ்வரர் ஆலயம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**இராமநாதபுரம் ஜில்லா—அருப்புக்கோட்டையில் 4—12—83 ஞாயிறு**

*இடம்:* இந்து நாடார் நடுநிலைப் பள்ளி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**தென் ஆற்காடு ஜில்லா—ஆவணிப்பூரில் 5—12—83 திங்கட்கிழமை**

*இடம்:* அரசினர் உயர்நிலைப்பள்ளி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**சேலம் ஜில்லா—வனவாசியில் 12—12—83 திங்கட்கிழமை**

*இடம்:* ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த தவ இல்லம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**பெரியார் மாவட்டம், பவானிவட்டம்—அம்மாப்பேட்டையில் 13-12-83 [செவ்வாய்க்கிழமை**

*இடம்:* ஸ்ரீ ராமகிருஷ்ண ஞானயோக தபோவனம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—சேரன்மகாதேவியில் 18—12—83 ஞாயிறு**

*இடம் :* பாரத்வாஜ ஆச்ரமம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி:* பகல் உணவு ரூ 1-50; மாலைச் சிற்றுண்டி ரூ. 1-00 நேரில் செலுத்தவும்.

**மதுரை ஜில்லா—பண்ணைபுரத்தில் 18—12—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* அருள்மிகு நந்தகோபாலன் திருக்கோவிலில் (காமுகுல ஒக்கலிக மஹாஜன சங்கக் கட்டடத்தில்)
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி போதானந்தர்
*உணவு வசதி:* உண்டு.



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹூ கார்த்திகை மீ | ஆரம் 11

## பிரார்த்தனை

क्व दूरं क्व समीपं वा बाह्यं क्वाभ्यन्तरं क्व वा ।
क्व स्थूलं क्व च वा सूक्ष्मं स्वमहिम्नि स्थितस्य मे ॥

— अष्टावक्रसंहिता

க்வ தூரம் க்வ ஸமீபம் வா பாஹ்யம் க்வாப்யந்தரம் க்வ வா ।
க்வ ஸ்தூலம் க்வ ச வா ஸூக்ஷ்மம் ஸ்வமஹிம்னி ஸ்திதஸ்ய மே ॥

— அஷ்டாவக்ரஸம்ஹிதா

ஸ்வசொருபத்தில் நிலைத்திருக்கிற எனக்குத் தூரம் எங்கே? சமீபம் எங்கே? உள்ளும் புறமும் எங்கே? ஸ்தூலமும் சூஷ்மமும் எங்கே?

எங்கும் ஆகிநின் ருனும் இயல்பறி யப்படா
மங்கை பாகங்கொண் டானுமதி சூடு மைந்தனும்
பங்க மில்பதி னெட்டொடு நான்குக்கு ணர்வுமாய்
அங்கம் ஆறும்சொன் ஞனும்ஐ யாறுடை ஐயனே.

— தேவாரம்

# அருள் விருந்து

ஒழுக்கம் சமயத்தின் சிகரமாகிறது.

தோல்வியினின்று பாடம் கற்பவன் அறிஞன்.

மனிதனை நேசிப்பவரைக் கடவுள் நேசிக்கிறார்.

சத்தியம் யாண்டும் மனிதனைக் காக்க வல்லது.

நன்றி உணர்ச்சி மனபரிபாகத்தின் விளக்கமாம்.

அனைத்தையும் துறப்பவனுக்கு அனைத்தும் சொந்தம்.

உடல் சன்மார்க்கத்துக்கு உற்ற நல்ல கருவியாகிறது.

தன்னைத்தான் வென்றவன் தேவர்களுக்கும் மிக்கானாகின்றான்.

பண்பாடு இல்லாப் பணக்காரன் கிட்டடத்தட்ட விலங்குக்கு ஒப்பாகிறான்.

மனிதனுடைய சிரிப்பு அவனுடைய மனபரிபாகத்தை வெளிப்படுத்துகிறது.

நேர்மையான மனமுடையவனுக்கு உலகில் உள்ள அனைத்தும் நேர்மையுடன் மிளிர்கின்றன.

தன் மனதைப் பரத்தினிடத்து ஒப்படைத்து வைத்திருப்பவன் யாண்டும் அமைதியுற்றிருக்கிறான்.

சிறிய நிகழ்ச்சியையும் சரியாகப் பொருள்படுத்துபவனுக்கு எதையும் சமாளிக்கும் திறமை வந்தமைகிறது.

அபரிக்கிரஹத்தில் உறுதியாக நிலைத்திருப்பவனுக்குத் தேவையாயுள்ள அனைத்தையும் இயற்கைத்தாய் அன்புடன் எடுத்து வழங்குகின்றாள்.

தொடுத்த கருமத்தைக் குறித்த காலத்தில் முடிப்பவன் அறிஞன்; விரைவில் செய்து முடிப்பவன் திறமைசாலி; முறையாகச் செய்து முடிப்பவன் ஒழுக்கம் நிறைந்தவன்.

நூறுபேர் செய்கிற வேலையை ஒரு யந்திரம் செய்கிறது. ஆனால் ஆயிரம் எந்திரங்கள் ஒன்றுசேர்ந்து ஒரு மனிதன் செய்கிற செயற்கரிய செயலைச் செய்யமாட்டா.

பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

1885ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 24ம் தேதி.

பரமஹம்சதேவர் பலராம்வசுவினுடைய இல்லத்திலே எழுந்தருளியிருந்தார். பிற்பகல் சுமார் ஒருமணிக்கு மகேந்திரநாதர் அங்கு வந்து சேர்ந்தார். அந்த இல்லத்தின் முகப்பு மண்டபத்தில் பரமஹம்சதேவர் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அவருக்குச்சற்றுத் தூரத்தில் இருந்த அன்பர்கள் சிலர் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். மகேந்திரர் அமைதியாகப் பரமஹம்சதேவருக்கு விசிறி வீச ஆரம்பித்தார். சில நிமிஷங்களில் பரமஹம்சதேவர் எழுந்து உட்கார்ந்தார். அவர் அணிந்திருந்த உடையோ தாறுமாறுக இருந்தது. மகேந்திரர் அவர் முன்னிலேயில் வீழ்ந்து வணங்கினர். அவருடைய பாதத்தைத் தொட்டுப் பாததூளியைத் தம் தலேயின் மீது பூசிக்கொண்டார்.

கனிந்த பாங்கில் மகேந்திரரிடம் பரமஹம்சதேவர் பகர்ந்ததாவது: "நீ உடல் நலமுற்றிருக்கின்ருயா? நான் சிறிது சிரமப்படுகிறேன். தொண்டையில் புண் ஒன்று தோன்றியிருக்கிறது. அதிகாலேயில் எழுந்திருக்கின்றபொழுது அதனல் வலி மிக உண்டாகிறது. சிகிச்சைமுறை ஏதாவது உளதா? ஏதேனும் இருக்குமாகில் அதை எனக்கு எடுத்து இயம்புவாயாக." அவர் சிரமப்பட்டவர் போன்று தென்பட்டார். அவர் மேலும் இயம்பியதாவது:"உணவோடு சேர்த்துமாங்காய் ஊறுகாய் சிறிது எடுத்து எனக்கு வழங்கினுர்கள். நான் அதை அருந்தினேன்." அதனுல் தொண்டை வலி அதிகமானது.

"உன் மனேவி எப்படி இருக்கின்ருள்? அவள் இங்கு வந்தபொழுது சிறிது நோய் வாய்ப்பட்டு இருந்ததாகத் தென்பட்டாள். அவளுக்கு நரம்புத் தளர்ச்சியோ, பதைபதைப்போ உண்டாகாதிருக்கும்படி. பொருத்தமான பானம் ஏதாவது எடுத்து அவளுக்கு வழங்குவாயாக!"

மகேந்திரர்: "ஐயன்மீர், அவளுக்கு நான் இளநீர் தரலாமா?"

பரமஹம்சர்: "ஆம் அப்படியே செய். அல்லது கற்கண்டு சர்பத்துத் தயார் செய்து தா. அதுவும் அவளுக்கு நலன் செய்யும்."

மகேந்திரர்: "சென்ற ஞாயிற்றுக் கிழமையிலிருந்து என் பெற்றோர்களுடன் எங்கள் சொந்த இல்லத்தில் நான் வசித்துவருகிறேன்."

பரமஹம்சதேவர்: "நீ அங்ஙனம் உன் பெற்றோருடன் வாழ்ந்திருப்பது மிக நன்று. சொந்த வீட்டில் வசித்திருப்பதில் வசதிகள் பல உள. நீ அங்கு வசித்து வருவதால், குடும்பக்காரியங்களுள் பலவற்றை பெற்ருேர்கள் கவனித்துக் கொள்வார்கள். அவைகளேக் குறித்துத் தொந்தரவுகள் எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் உனக்கு ஏற்படாது."

உரையாடிக் கொண்டிருந்தபொழுது பரமஹம்சதேவருடைய வாய் உலர்ந்து போயிற்று. ஒரு குழந்தையின் பாங்கில் மகேந்திரரிடம் அவர் இயம்பியதாவது: "என் வாய் உலர்ந்து போயிருப்பதாக நான் உணர்கிறேன். அத்தகைய உணர்ச்சி மற்றவர்களுக்கும் வருவதுண்டா?"

யோகேந்திரனேப் பார்த்து மகேந்திரர் கேட்டதாவது: "அத்தகைய உணர்ச்சி உனக்கும் வருகிறதா?"

யோகேந்திரன்: "இல்லே. அத்தகைய உணர்ச்சி எனக்கு உண்டாகவில்லே. ஒரு வேளே பரமஹம்சதேவரின் சரீரத்தில் கிளம்பியுள்ள உஷ்ணத்தின் விளேவாக அவருக்கு நாவறட்சி ஏற்பட்டிருக்கலாம்."

அரியதா என்னும் ஊரைச்சேர்ந்த யோகேந்திரன் பரமஹம்ச தேவரிடம் பக்தி மிக வைத்திருந்தான். பரமஹம்ச தேவர் சரீரத்தை உகுத்தான பிறகு இந்த யோகேந்திரன் துறவறம் பூண்டுகொண்டான். பரமஹம்ச தேவருடைய சந்நியாசி சிஷ்யர் கூட்டத்தில் இவனும் ஒருவன் ஆனுன்.

பரமஹம்சதேவர் அணிந்திருந்த உடை இன்னும் தாறுமாறுன நிலேயிலேயே இருந்தது. அதைப்பார்த்த அன்பர்கள் சிலர் அவர் அதைப் பொருட்படுத்தாது இருந்ததைக் குறித்துத் தங்களுக்குள்ளேயே புன்னகை பூத்தனர்.

பரமஹம்சர்: "தாய் ஒருத்தி தன் குழந்தை களைக் குளிப்பாட்டிக் கொண்டிருக்கிறபொழுது எத்தகைய காட்சி தருகிறுளோ அந்த நிலையில் நான் இப்பொழுது இருக்கிறேன். (இதைக் கேட்டு எல்லாரும் நகைக்கின்றுர்கள்) நா உலர்ந்து வருகையில் நான் பேரிக்காயைச் சாப்பிடலாமா அல்லது கிச்சிலிப் பழம் சாப் பிடலாமா?"

பாபுராம்: "நான் தங்களுக்காகக் கிச்சிலிப் பழம் ஒன்று வாங்கி வரலாமா?"

பரமஹம்ச தேவர்: "இந்தக் கடும் வெயிலில் நீ வெளியில் போகவேண்டாம்."

மகேந்திரர் பழையபடி பரமஹம்ஸ தேவ ருக்கு விசிறி வீசிக்கொண்டே இருந்தார்.

பரமஹம்ச தேவர்: "நீ விசிறி வீசுவதை நிறுத்து. நெடுநேரம் இச்செயலைச் செய்து கொண்டே இருக்கிறுய்."

மகேந்திரர்: "ஐயனே, தங்களுக்கு விசிறி வீசுதலில் நான் மிகவும் மகிழ்வு அடைகிறேன். சலிப்பு ஏதும் எனக்கு உண்டாகவில்லை."

பரமஹம்ச தேவர்: (அன்புடன்): "ஆயாசம் ஏதும் உண்டாகவில்லையா?"

அருகிலிருந்த பள்ளிக்கூடம் ஒன்றில் மகேந் திரர் ஆசிரியராக உத்தியோகத்தில் இருந் தார். நண்பகலில் அவருக்கு இடைநேரம் சிறிது கிடைத்தது. எனவே, பரமஹம்சரைத் தரிசிக்கவும் அவருக்குப் பணிவிடை பண்ண வும் இங்கு வந்திருந்தார். இப்பொழுது பள்ளிக்குத் திரும்பிப்போகும் வேளை வந்தாய் விட்டது. ஆதலால் பரமஹம்சர் முன்னிலை யில் வீழ்ந்து வணங்கினர்.

பரமஹம்சதேவர்: (மகேந்திரரைப் பார்த்து) "இப்பொழுது திரும்பிப்போக வேண்டும் அல்லவா?"

அன்பர் ஒருவர்: "பள்ளிக்கூடம் இன்னும் நடந்துகொண்டிருக்கிறது. இடைநேரத்தில் அவர் இங்கு வந்திருக்கிறுர்."

புன்னகை பூத்தவராகப் பரமஹம்ச தேவர் பகர்ந்ததாவது: "ஏழெட்டுக் குழந்தைகளைப் பெற்றெடுத்து வளர்க்கும் தாய் ஒருத்திக்கு நேரானவன் இவன். அல்லும் பகலும் அந்தத் தாய் தன் குழந்தைகளைப் பேணுவதிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கிறுள். இடை யிடையே தன் கணவனுக்குப் பணிவிடை பண்ணவும் வேண்டிய அவகாசத்தை அவள் தேடிக்கொள்கிறுள்."

மகேந்திரர் உத்தியோகம் பண்ணிவந்த பள்ளிக்கூடம் சாயங்காலம் நான்கு மணிக்கு முடிவுற்றது. அதன் பிறகு அவர் திரும்பவும் பரமஹம்சர் முன்னிலைக்கு வந்துசேர்ந்தார். பரமஹம்ச தேவரோ பலராம்வசுவினுடைய வீட்டின் முன் மண்டபத்தில் வீற்றிருந்தபடியே இருந்தார். பக்தர்கள் ஒருவர் பின் ஒருவராக ஆங்கு வந்து குழுமினர். இளைய நரேந்திர னும் ராம் என்னும் பெயர் படைத்திருந்த பக்தனும் வந்து சேர்ந்தார்கள். மூத்த நரேந் திரன் ஏற்கனவே அங்கு வந்து அமர்ந்திருந் தான் (பிற்காலத்து விவேகானந்தர்). பள்ளியி னின்று திரும்பி வந்த மகேந்திரர் பரமஹம்சரை வணங்கிவிட்டு ஓரிடத்தில் அமர்ந்தார். அந்தப் புரத்தில் இருந்த தாய்மார்கள் பரமஹம்ச தேவருக்காகவென்று ஒரு தட்டு நிறைய அல்வா அனுப்பிவைத்தார்கள். ஆனல் அவ ருக்குத் தொண்டையில் புண் இருந்ததினல் கடின பதார்த்தம் எதையும் அருந்த அவருக்கு இயலவில்லை.

நரேந்திரனிடம் பரமஹம்ச தேவர் பகர்ந்த தாவது: "இந்தப் பக்ஷணம் மிக நல்லது. இதை நீ எடுத்து அருந்து. அது மிக நன்று. சிறி தளவாவது இதை ஏற்றுக்கொள்வாயாக!" (இதைக் கேட்ட அனைவரும் நகைத்தனர்.)

மாலை நேரம் வந்துகொண்டிருந்தது. பரம ஹம்சதேவர் கிரீஷ் சந்திரகோஷருடைய இல் லத்திற்கு எழுந்தருள ஆயத்தமானுர். அந்தப் பக்தரோ தம்முடைய இல்லத்திற்கு அவ ருடைய வருகையை முன்னிட்டு விழா ஒன்று எடுக்க ஆயத்தப்படுத்தியிருந்தார். மாடியி னின்று பரமஹம்ச தேவர் கீழே இறங்கி வந் தார். அவருடன் மகேந்திரரும் ஏனைய சில அன்பர்களும் கீழே இறங்கி வந்து சேர்ந்தார் கள். வாயிலண்டை யாசகன் ஒருவன் நின்று கொண்டு ஸ்ரீ ராமனுடைய மகிமையை நன்கு பாடிக்கொண்டிருந்தான். பரமஹம்சதேவரும் அவன் எதிரே நின்று கொண்டு அப்பாட லுக்குச் செவிமடுத்தார். அப்பொழுது அவர் தியானவஸ்தையில் இருந்தவராகத் தென்பட் டார். அவன் நன்கு பாடுகிறுன் என்று மகேந் திரரிடம் பரமஹம்சர் தெரிவித்தார். பக்தர்

ஒருவர் அந்த யாசகருக்கு ஓர் அணு எடுத்து வழங்கினர்.

போஸ்பரா சந்தினுள் பரமஹம்சதேவர் சென்று கொண்டிருந்தார். புன்சிரிப்புடன் மகேந்திரரிடம் அவர் இயம்புவாராயினர்: "இதோ, இங்குக் கூடி நிற்கும் பொதுமக்கள் 'அதோ பார், பரமஹம்ச தேவருடைய திருக் கூட்டம் இவ்வழியில் வந்து கொண்டிருக் கிறது, என்று இயம்புவார்கள்."

கிரீஷ்சந்திரகோஷினுடைய இல்லத்தி னுள்ளே பரமஹம்ச தேவர் எழுந்தருளினர். பக்தர்கள் பலரைக் கிரீஷ்சந்திரகோஷ் தம் இல்லத்திற்கு வரவழைத்திருந்தார். அவர்கள் எல்லாரும் அச்சீரிய நிகழ்ச்சியில் கலந்து கொள்ளவேண்டும் என்பது அவருடைய நோக்கம். பரமஹம்சதேவருடைய வரு கையை முன்னிட்டு அவர்கள் எல்லாரும் எழுந்து நின்றனர். பரமஹம்சதேவரும் புன் னகை பூத்தவராக அவருக்காக என்று ஆயத் தப்படுத்தி வைத்திருந்த ஆசனத்தின் மீது அமர்ந்தார். அவரைச் சுற்றிலும் பக்தர்களும் அமர்ந்தார்கள். அவர்களுள் மகிம்சரண், ராம், பவநாத், பாபுராம், நரேந்திரன், இளைய நரேந்திரன், யோகேந்திரன், சுனி, பலராம், மகேந்திரர் ஆகியவர்கள் குறிப்பிடத் தக்கவர் களாயிருந்தார்கள்.

மகிம்சரணிடம் பரமஹம்சதேவர் பகர்ந்த தாவது: "உம்மைப்பற்றி கிரீஷரிடம் நான் ஏற் கனவே சொல்லி வைத்திருக்கிறேன். முக்கிய மான விஷயம் ஒன்று உளது. மேற்போக்கான இணக்கம் வேண்டாம். நான் இப்பொழுது பகருகிற விஷயத்தை ஆழ்ந்து எண்ணிப் பாரும். நீங்கள் இருவரும் அன்யோன்யமாக உரையாடுவதைப் பார்க்க நான் விரும்பு கிறேன். ஆயினும் அவரவர் கொள்கையில் ஆழ்ந்து பற்று வைத்திருங்கள்.'' (இதைக் கேட்டு எல்லாரும் நகைத்தார்கள்.)

கிரீஷ்சந்திரகோஷரும் மகிம்சரணரும் சம் வாதம் பண்ண ஆரம்பித்தார்கள். அப்பொழுது ராம் இயம்பியதாவது: ''இந்த விவாதம் நிற் கட்டும். பக்தி நிரம்பிய பாடல்கள் சிலவற்றை நாம் கேட்டு மகிழ்வுற்றிருப்போம்."

பரமஹம்சதேவர்: "இல்லை, இவர்கள் பேச் சைத் தொடர்ந்து நடத்தட்டும். இவர்கள் இரு வரும் ஆங்கிலம் கற்றவர்கள். மேல்நாட்டு முறையையும் விவாதத்தில் கையாள வல்லவர் கள். ஆதலால் இவர்களின் விவாதத்தைக் கேட்க நான் ஆவல் பூண்டு இருக்கிறேன்.''

''சாதனத்தின் வாயிலாகச் சாதாரண ஜீவன் ஒருவன் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு நிகராகப் பரிண மிக்க வல்லவனுகிறான்'' என்று மகிம்சரண் இயம்பினர்.

''இல்லை, ஸ்ரீகிருஷ்ணன் அவதார புருஷன். அவன் பரமாத்ம சொருபம். அந்த நிலையை எட்ட சாதாரண ஜீவன் ஒருவனுக்கு இய லாது''என்று கிரீஷ்சந்திர கோஷர் மறுமொழி கூறினர்.

மகிம்சரண்: ''நான் பகர்வது யாது என்ப தைத் தாம் அறிந்து கொண்டீரா? சான்று ஒன்று சொல்லுகிறேன், கேட்பீராக! வில்வ மரத்திற்கு இடைஞ்சலாய் இருக்கின்ற தடை களை நீக்கிவிட்டால் அந்த வில்வமரமானது ஒரு பெரிய மரமாகப் பரிணமிக்க வல்லது. இது இயற்கையின் கூறு. அதே பாங்கில் ஆத்ம சாதகன் ஒருவன் தான் புரிந்துவருகிற சாதனத் தின் வாயிலாகப் பிரபஞ்சத்தில் உள்ள பண்பு களில் எந்தப் பகுதியை வேண்டுமானுலும் பெறக்கூடும்.''

கிரீஷ்சந்திரகோஷர்: ''இயற்கையைப்பற் றித் தாம் இங்ஙனம் பகரலாம். மற்று, ஆத்ம சாதகன் ஒருவன் யோக சாதனத்தின் வாயிலா கப் பெரிய பெரிய நிலைகளை அடைய முடியும். ஆயினும் அன்னவன் ஸ்ரீ கிருஷ்ணனுகமாட் டான். அவதார மூர்த்தியாகிய கிருஷ்ணனு டைய மகிமை கிருஷ்ணனுக்கே உரியதாம்.அவ னுடைய மகிமைகள் அனைத்தும் ஸ்ரீமதி ராதை யின் வாயிலாக வெளிப்படுமாகில் அப்படி ராதையாகத் தன்னைக் காட்டிக்கொண்டவனும் ஸ்ரீ கிருஷ்ணனேயாம். அவனுக்குப் புறம்பாக அவன் மயமாக வேறு எந்த மூர்த்தியும் இல் லவே இல்லை. சாதாரண ஜீவன் ஒருவனிடம் கிருஷ்ணனுடைய மகிமைகள் அனைத்தும் நான் காண்பேனுகில் அந்தச் சாதாரண மனிதனுகத் தென்பட்டவன் ஸ்ரீகிருஷ்ணனேயாம். வேறு எவர்க்கும் அது சாத்தியப்படாது.''

மகிமசரண் இக்கொள்கையை ஏற்றுக் கொண்டார். பக்தி மார்க்கமும் யோக மார்க்க மும் முடிவில் ஒன்றித்துவிடுகின்றன.

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

**10-4. எல்லை இல்பே ரின்பமயம் எப்படிஎன்**
**[றோர்தமக்குச்**
**சொல்அறியா ஊமர்கள்போல் சொல்லுநாள்**
**[எந்நாளோ?**

இயற்கையின்கண் உள்ள அனைத்தையும் ஏதேனும் ஒரு மொழியின் மூலம் விளக்குவது சாத்தியம். உயிர்கள் அனைத்தும் ஆனந்தத்தையே நாடி அல்லும் பகலும் உழைத்து வருகின்றன. ஆனந்தம் என்றால் என்ன என்பதை ஓரளவு நாம் அறிய வருகிறோம். இதே ஆனந்தம் பேரானந்தமாக அமைய வல்லது என்பதையும் சுமாராக நாம் அறிய வருகிறோம். எல்லையில் அடங்காது அகண்டாகாரமாக இப்பேரின்பம் விரிவடைய வல்லது என்பதைச் சொல்லால் விளக்குகிறோம். ஆனால் அந்நிலையை உள்ளபடி விளக்கிக்காட்ட மொழி பயன்படாது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். சர்க்கரை தித்திக்கிறது என்கிறோம். தித்திப்பு என்றால் என்ன என்னும் கேள்வி எழுகிறது. அதற்கு விடையாக இனிப்பு என்று இயம்புகிறோம். இனிப்பு என்றால் என்ன என்னும் கேள்வி அடுத்தபடி எழுகிறது. அதற்கு மதுரம் என்னும் மறுமொழி வருகிறது மதுரம் என்றால் என்ன என்னும் கேள்வி அதைத் தொடர்ந்து வருகிறது. இங்ஙனம் சொல் சித்திரம் பொருள் ஒன்றை விளக்க ஓரளவு பயன்படுகிறது. அதற்கு மேல் அனுபவம்தான் உதவுகிறது. சர்க்கரை தித்திக்கிறது என்று சொல்வதற்குப் பதிலாக அதைப்பற்றிக் கேட்கின்றவனுக்கு அதை எடுத்து வழங்கி அனுபவத்தில் அதைப்பற்றி அறியும்படி செய்தல் வேண்டும். அகண்டாகாரத்தில் விரிந்து ஓடும் பேரானந்தத்தைப் பற்றிப் பேசுவது சாத்தியப்படாது. பேச இயலாத ஊமை ஒருவன் கனவில் அரியபெரிய அனுபவம் ஒன்றை அடையப்பெற்றான் என்று வைத்துக்கொள்வோம். அதை அவன் உணர்கிறான். ஆனால் அதை விளக்குதற்கு அவன் கைவசம் மொழி ஏதும் இல்லை. அந்த நிலையிலிருக்கிறான் அகண்டாகார ஆனந்தத்தை அடையப்பெற்றவன். நிலையை அடையப் பெற்றவர்களுக்கும் அது சொல்லால் விளக்குவது சாத்தியமன்று. ஆயினும் மற்றவர்களுக்கு தாங்கள் அடையப் பெற்ற நிலையை மற்றொரு பாங்கில் விளக்குவது அவர்களுக்குச் சாத்தியம். முன்னிலைக்கு வருகின்ற மற்றவர்களுக்கும் பேரானந்தத்தைப் பேசாது இருந்து ஊட்டும் திறமை தங்களையறியாது அவர்களுக்கு வந்து வாய்க்கிறது. குளிரில் நடுங்குகிறவன் எரிகிற தீக்கருகில் சென்றால் குளிர் ஒழிந்துபட்டுப் போகிறது. அங்ஙனம் பரமானந்தத்தில் திளைத்திருப்பவர் முன்னிலைக்கு வருகின்றபொழுது அந்தப் பேரானந்தம் எதிரே வருகிறவனுடைய உள்ளத்தையும் தொடுகிறது. அதற்கு மொழி தேவையில்லை. சிறு குழந்தை ஒன்றனிடத்துத் தெய்விகம் திகழ்கிறது. அது ஆனந்தத்தில் திளைத்திருக்கிறது. அதன் அருகில் வருகிற மற்றவர்கள் சிறிதுநேரத்திற்குத் தங்கள் தொல்லைகளையும் துன்பங்களையும் துடைத்துத் தள்ளிவிட்டு அக்குழந்தையின் நிலையில் பங்குகொள்ளுகின்றனர். சான்றோர் சாந்நித்தியம் அத்தகையதாம். அத்தகைய சொல்லற்கரிய பெருநிலை எப்பொழுது வந்து வாய்க்கும் என்பது இக்கண்ணியின் உட்கருத்தாகும்.

**10-5. அண்டர்அண்ட கோடி அனைத்தும் உகாந்த**
**[வெள்ளம்**
**கொண்டதுஎனப் பேரின்பம் கூடுநாள்**
**[எந்நாளோ.**

ஊழிக்காலம் என்றால் என்ன என்பது ஜீவர்கள் அனைவரும் அறிந்துள்ள விஷயமேயாம். அறிந்திருந்தும் அறியாதவர்களுடைய நிலையில் அவர்கள் உழன்று கொண்டிருக்கின்றனர். அதற்குக் காரணம் ஆராய்ச்சியின்மையேயாம். ஜீவகோடிகள் அனைத்தும் சிறிது நேரமாவது சுஷுப்தி அவஸ்தையில் இருக்கின்றனர். சுஷுப்தி அவஸ்தை என்பது கனவற்ற அயர்ந்த உறக்கம். அத்தகைய உறக்கமும் பிரளயமும் ஒன்றேயாம். பிரளயமென்றால் ஊழிக்காலம் என்று உயிர்கள் அனைத்தும் அதைக் குறித்து அஞ்சுகின்றன. ஆனால் அயர்ந்த உறக்கமோ உயிர்கள் அனைத்துக்கும்

உடந்தையாம். இனி, பிரளயம் வேறு, அயர்ந்த உறக்கம் வேறு அன்று. அயர்ந்த உறக்கம் தனித்தனி ஜீவர்களுடைய அனுபவம் ஆகிறது. பிரளயம் அண்டங்கள் அனைத்துக் கும் பொதுவானது. பிரளயத்திலும், சுஷுப்தி அவஸ்தையிலும் காலம் எடுத்து விழுங்கப்படு கிறது. அந்நிலையில் இருக்கும் ஜீவனுக்குக் கணப்பொழுதும் கல்பமும் ஒன்றேயாம். ஆனால் அதைக் குறித்து ஆராய்ச்சி பண்ணுமை யினுல் அது அவனுக்கு விளங்குவதில்லை. அதேவிதத்தில் எல்லையிலடங்காத அண்டங் களும் சுஷுப்தி அவஸ்தையில் ஒடுங்குகின் றன. நிமித்தம் அல்லது செயல் எதற்கும் ஆங்கு இடமில்லை. அந்நிலையில் ஜீவாத்மன் உண்மை யில் பரமானந்தத்தில் திளைத்திருக்கிருன். தான் பரமானந்தத்தில் திளைத்திருப்பது தனக்கே தெரியாது. அது அக்ஞானத்தின் விளைவு. அந்த அக்ஞானம் அகலுமிடத்துச் சாதாரண ஜீவன் பரத்தை அடையப்பெற்ற நிறைஞானியாகிருன். எனவே அக்ஞானம் அகன்று ஞானம் உதயமாகுமிடத்துத் தான் யாண்டும் நிலைத்திருந்த பரமானந்தப்பேறு அவனுக்கு ஊர்ஜிதமாகிறது. அது ஊர்ஜித மாகும் நாள் எந்நாளோ என்பது இக்கண்ணி யின் கருத்தாம்.

**10-6. ஆதிஅந்தம் இல்லாத ஆதிஅ நாதியனும்**
**ஜோதிஇன்பத் தூடே துலையுநாள் எந்நாளோ.**

கடலினின்று ஆவியாக மேலே கிளம்பிவந்த நீர்த்துளிஒன்றிற்கு எண்ணரிய பலப்பல நிலை கள் இருக்கின்றன. அங்ஙனம் ஜீவன் ஒருவன் மாறிமாறி அமைகின்ற நிலைகளுக்குத் துவக்க மும் உண்டு; முடிவும் உண்டு.வானத்தினின்று உறைந்து நீர்த்துளியாகக் கீழே வருகின்ற பொழுது துளிஎன்னும் வியக்திக்குத் துவக்கம் உண்டு.அதுதரையில்விழுந்துமீண்டும்ஆவியாக மறைந்துபோகிறது. ஆக அந்த நீர்த் துளிக்கு முடிவும் இருக்கிறது. அதே நீர்த்துளியானது மலையுச்சியில் உறைபனியாக வீழ்ந்து ஏனைய உறைபனியோடு ஒட்டி இருக்கின்றபொழுது அந்தப் புதிய நிலையானது சாச்வதமாக இருப்பதுபோன்று தென்படுகிறது. தரை யில் வீழாது வானத்திலேயே அது வெவ்வேறு வடிவெடுக்கிறபொழுது அது வெண்மேகம் என்றும் கருமேகம் என்றும் மஞ்சு என்றும் இன்னும் சில பெயர்கள்பெற்று இலங்குகிறது. ஆனால் அந்த நிலைகள் அந்த நீர்த்துளியி னின்று அதிவிரைவில் மறைந்துபட்டுப் போகின்றன. இப்படிச் சமுத்திரத்தினின்று மேலே கிளம்பிவந்த நீராவியின் நிலைமையோடு ஜீவாத்மன் ஒருவனை ஒப்பிடலாம். அவனு டைய யதார்த்த நிலை கடலுக்கு ஒப்பானது. கடலுக்கு யாண்டும் நிலைபேறு உண்டு. அதே விதத்தில் அகண்ட சச்சிதானந்தம் யாண்டும் ஒரேபாங்கில் நிலைத்திருக்கிறது. அது படைத் திருக்கின்ற மாயாசக்தியின் வல்லமையால் அந்த அகண்ட சச்சிதானந்தம் எண்ணிறந்த ஜீவ வியக்திகளைத் தொடர்ந்து எடுத்து வரு கிறது. அந்த வியக்திகளில் சில, நெடுங் காலம் நிலைத்திருக்கின்றன. வேறு சில உட னுக்குடனே அழிந்துபட்டுப் போகின்றன. மானுட வடிவத்தில்உள்ள ஜீவன் கிட்டத்தட்ட நூருண்டு வரையில் அதே வியக்தியில் இருந்து இன்பம் துய்த்து வருகிருன். மற்று, சின்னஞ் சிறு ஈசலாக வடிவெடுக்கின்ற ஜீவன் பெரிதும் அன்றைக்கே அழிந்துபட்டுப் போகிறது. இத்தகைய ஓய்வில்லா விளையாட்டைப் பரம் பொருள் எடுத்து வருவதை மாயாசக்தியின் துணைகொண்டு ஆராய்ச்சியாளர்களாகிய நாம் காண்கிறோம்.

வானத்தினின்று கீழே விழுகின்ற நீர்த்துளி ஒன்றின் பாங்கை மீண்டும் ஆராய்வோம். அப்படி வீழ்கின்ற நீர்த்துளி கடலுக்குப் பக்கத்தில் இருக்கும் சுடுமணலில் வந்து படியு மாகில் அது மீண்டும் ஆவியாக மேலே போகி றது. அதற்கு நிகராக மாயையிலே கட்டுண் டுள்ள ஜீவன் பிறவிப் பெருங்கடலில் யாண் டும் உழன்றுகொண்டேயிருக்கிருன். மற்று, நீர்த்துளியானது சுடுமணலில் வீழ்வதற்கு மாருகக் கடலில் விழுமாகில் அது தன்னு டைய யதார்த்த நிலையை மீண்டும் அடையப் பெற்றதாகிறது. அங்ஙனம் ஜீவாத்மன் ஒருவ னுக்கு ஞானேதயம் வருங்கால் அவனுக்குச் சொந்தமாயுள்ள பாரமார்த்திகப் பெருங்கடலை அவன் அடையப்பெற்றவனுகிருன். நிலமிசை வந்து நீர்த்துளி எடுத்துள்ள பல விகாரங் களுக்கு நிகராக அந்த ஜீவாத்மன் மாயப்பிர பஞ்சத்தில் எடுத்த கணக்கற்ற பிறவிகள் மாயமாய் மறைந்துபோகின்றன.

# விரிவே வாழ்வு சுருங்குதலே மரணம்

( சுவாமி விவேகானந்தர் )

இயற்கையில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றன. ஆனல் வாழ்க்கையில் எல்லார்க்கும் சமவாய்ப்புக்கள் தரப்படவேண்டும். வலிமையே இல்லாதவர்களுக்கு அதிக வாய்ப்புக்களும், வலிமையுடையவர்களுக்குக் குறைந்த பயிற்சியும் தரவேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்படுவதுண்டு. கல்வியில் வல்ல ஒருவருடைய மகனுக்குக் கல்வி புகட்ட ஓர் ஆசிரியர் தேவைப்படுகிருர் என்ருல் பாமரனுக்குக் கல்வி புகட்டப் பத்து ஆசிரியர்கள் தேவைப்படுவார்கள். ஒருவனுக்கு இயற்கையிலேயே கூர்மையான அறிவு அமையாவிட்டால் அவன் அறிவை வளர்த்துக்கொள்வதற்கு அதிக அளவு உதவி தரப்படவேண்டும். பாமர மக்கள் உயர்த்தப்படவேண்டும். அவர்கள் உள்ளத்தில் நம்பிக்கை ஊட்டக்கூடிய சொற்களை அவர்களுக்கு நாம் கூறவேண்டும். "நீங்களும் எங்களைப் போன்ற மனிதர்கள். எங்களுக்குரிய உரிமைகள் யாவும் உங்களுக்கும் உண்டு" என்பதை அவர்களுக்குச் சொல்ல நாம் கடமைப்பட்டிருக்கின்ருேம்.

மேல்நிலையில் உள்ளவர்களைக் கீழ்நிலைக்குக் கொண்டு வருவதால் பிரச்னை தீர்ந்துவிடாது. கீழ்நிலையில் உள்ளவர்களை மேல்நிலைக்கு உயர்த்துவதன் மூலம்தான் பிரச்னையைத் தீர்க்க முடியும். பிராம்மணன் ஆவது வாழ்க்கையின் உயர்ந்த லக்ஷியமாகும். பாமரனுகவிருப்பது வாழ்க்கையின் கீழான லக்ஷியமாகும். பாமரனைப் பிராம்மண நிலைக்கு உயர்த்துவதற்கு நாம் வேலை செய்ய வேண்டும். பண்பாட்டிலும், கல்வியிலும் பாமரமக்களை உயர்த்துவதுதான் அவர்களைப் பிராம்மணர்களாக்குவதற்குரிய வழியாகும். வகுப்புக்கலவரங்கள் ஏற்படாதிருக்க நாம் கவனம் செலுத்தவேண்டும். ஏழைவிவசாயிகள், தொழிலாளர்கள் ஆகியவர்களுக்கும் பணக்காரர்களுக்குமிடையில் பூசல்கள் வராமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

ஒருசிலர் பொருள் ஈட்டுவதால் மற்றவர்களைவிட முன்னணியில் இருப்பார்கள். அது அவர்களிடத்திலுள்ள ஆற்றல் காரணமாக ஏற்படுவதாகும். அதை முன்னிட்டு அவர்கள் தங்கள் திறமையின்மூலம் பொருள் ஈட்டுவதில் மற்றவர்களை நசுக்குவதோ, கொடுமைப்படுத்துவதோ நியாயமாகாது. இந்த நியாயமற்ற செயலை எதிர்த்துத்தான் போராட்டம் நிகழ்கிறது. சில சலுகைகளை ஒருசிலரே அனுபவித்து வரும்பொழுதுதான் தனி உரிமை ஏற்படுகிறது. அப்படிச் சிலர் தனி உரிமைகளை நீண்டகாலத்திற்கு அனுபவித்து வருவது ஒழுக்கத்தைச் சீர்குலைக்கிறது. வேற்றுமையை வளர்க்காமல் ஒற்றுமையின்கண், சமத்துவத்தின்கண் எடுத்துச் செல்லும் பணிதான் நாம் இப்பொழுது ஆற்றவேண்டிய பணியாகும். தனி உரிமையை அழித்துவிட்டு மக்கள் அனைவரையும் சமமாக நினைக்கச் செய்யும் ஞானம் நம் மக்களுக்கிடையே ஏற்படுவதற்கு நாம் பணிபுரிவோம். மக்கள் அனைவரும் சமமென்ற உணர்ச்சியை உண்டாக்குவதே ஞானமாகும்.

இந்தியா துன்பப்படுவதற்கும், கீழ்மை அடைவதற்கும் முக்கியமான காரணங்களுள் ஒன்று அதனிடத்தில் உள்ள குறுகிய மனப்பான்மையாகும். முத்துச் சிப்பி ஒன்று ஓட்டுக்குள் சென்று முத்தை உண்டாக்கி வைத்துக்கொண்டால் அதனல் மற்றவர்களுக்கு எந்தவிதப்பயனும் இல்லை. அதுபோன்று இந்தியா தன்னுடைய ஆன்மீகச் செல்வத்தை மற்ற மக்களுக்குத் தர மறுத்ததால் அது தாழ்வுற்றது.

பிறருக்கு நாம் வழங்கவும் வேண்டும். நமக்குத் தேவையானதைப் பிறரிடமிருந்து பெறவும் வேண்டும். கொடுப்பதும் பெறுவதும் தான் இயற்கையின் நியதியாகும். இந்தியா மீண்டும் உயர்நிலையை அடைய விரும்பினல் அது தன்னிடமுள்ள ஆன்மீகச் செல்வங்களை எல்லாம் மற்ற நாடுகளுக்கு வாரி வழங்க வேண்டும். ஆன்மீகச் செல்வத்தை மற்ற நாடுகளுக்குத் தந்து, மற்ற நாடுகளிடமிருந்து அது தனக்கு வேண்டியதைப் பெறலாம். விரிவடைவதுதான் வாழ்வாகும். சுருங்கிக்கொண்டே போவது மரணமாகும். அன்பைப் பெருக்குவது வாழ்வு; வெறுப்பை வளர்ப்பது மரணமாகும்.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-183

*996.* **श्री चक्रराज निलया** ஸ்ரீ சக்ர ராஜ நிலயா —ஸ்ரீ சக்கரத்தில் நன்கு வீற்றிருப்பவள்.

ஸ்ரீ சக்ரம் என்பது பிரபஞ்சத்தின் தொகை. அதற்கு நிகராக ஆன்றோர்களால் வரையப்பட்ட ஸ்ரீ சக்ரம் என்னும் படம் ஒன்று உளது. தேசமும், அதைப்பற்றிய படமும் ஆகிய இவ்விரண்டினோடு ஒப்பிடலாம். தேசம் முழுதும் ஒரு மனிதன் சென்று பார்க்க முடியாது. ஆயினும் அதைப்பற்றிய கருத்தைத் தேசப்படத்தின் வாயிலாக ஓரளவு அறிந்து கொள்ளமுடியும். அதே விதத்தில் வரையப்பட்ட ஸ்ரீ சக்கரத்தினின்று இயற்கை என்னும் அசல் சக்கரத்தை ஓரளவு நாம் அறிய வருகிறோம். வரையப்பட்ட ஸ்ரீசக்கரத்தில் வட்டங்களும், திரிகோணங்களும் ஒன்றனுள் ஒன்று புதைந்தும் பின்னியும் அமைந்துள்ளன. ஒரு திரிகோணம் தன்னளவில் நிறைநிலை எய்தியிருக்கிறது. அப்படி அமைந்துள்ள திரிகோணம் அதைவிடப் பெரிய மற்றொரு திரிகோணத்தின் அம்சமாக அமைந்திருக்கிறது. ஒரு திரிகோணத்தில் நேர்க்கோடுகள் மூன்று அமைந்துள்ளன. அதில் பெரிய கருத்துப் புதைந்து இருக்கிறது. காலம், தேசம், நிமித்தம் ஆகிய மூன்று கூறுகளுக்குச் சின்னமாக மூன்று கோடுகள் இருக்கின்றன. பிறகு சத்வம், ரஜஸ், தமஸாகிய மூன்று குணங்களுக்கும் அறிகுறியாக மூன்று கோடுகள் அமைந்துள்ளன. சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் எனும் பிரகிருதியின் மூன்று செயல்களுக்கும் சின்னமாக மூன்று கோடுகள் அமைந்திருக்கின்றன. அணுவிற்கு அணுவாய் இருக்கும் நுண்பொருளிலும் இக்கோட்பாட்டைக் காண்கின்றோம். அண்டங்களிலும், பகிரண்டங்களிலும் இதே கோட்பாடுதான் இடம் பெற்றிருக்கிறது. இவையாவிற்கும் மேலாக அண்டத்திலுள்ள ஒவ்வொரு பகுதியும் அதனதன் செயலை இனிது நிறைவேற்றுகிறது. அதற்கிடையில் ஏனைய வடிவங்களின் செயல்களில் முரண்படாது அண்டத்திலுள்ள அனைத்தின் செயல்கள் நிறைவேறி வருகின்றன. வட்டம் ஒன்று ஆதி அந்தம் இல்லாத அகண்டத்தின் சின்னமாகிறது. ஸ்ரீ சக்கரத்தில் வட்டங்கள் ஒன்றனுள் ஒன்று புதைந்திருப்பதன் வாயிலாக ஒவ்வோர் அண்டமும் ஏனைய அண்டத்தோடு பிணங்கிக் கொள்ளாது தன் செயலை நன்கு நிறைவேற்றி வருகிறது. இங்ஙனம் இயற்கையில் நிகழ்ந்து வருகிற செயல்கள் அனைத்துக்கும் மற்றும் அவைகளின் ஒழுங்குப்பாட்டிற்கும் சின்னமாக வரையப்பட்ட ஸ்ரீ சக்கரம் அமைந்திருக்கிறது. அதை ஒரு புறம் ஒதுக்கி வைத்து விட்டு இயற்கையை நேர் ஆராய்ந்து பார்த்தாலும் இவ்வுண்மை வெளியாகிறது. வரையப்பட்ட ஸ்ரீ சக்கரத்தில் பூஜா முறைப்படி அம்பிகையை ஆவாஹனம் பண்ணுகிறோம். ஆனால் இயற்கை என்னும் அசல் சக்கரத்தில் அவள் யாண்டும் இனிது வீற்றிருக்கிறாள். சரீரமும் சரீரியும் ஒன்றாகக் கருதப்படுவதற்கு நிகராக ஸ்ரீ சக்கரமும், அதில் வீற்றிருக்கும் அம்பிகையும் இணை பிரியாது அமைந்துள்ளார்கள். ஆதலால் இயற்கையைச் சரியாக ஆராய்ச்சி பண்ணுபவர்களுக்கு அது அம்பிகையின் சொரூபமே என்பது தெற்றென விளங்கும். ஆதலால் ஆத்ம சாதகன் ஒருவன் அம்பிகையை நாடி அலைந்து திரிய வேண்டிய அவசியம் இல்லை. இயற்கையோடு அவன் வைக்கின்ற நல்லிணக்கமே சிறந்த வழிபாடாகிறது. இயற்கையில் நலன், கேடு இரண்டும் நிறைந்திருக்கின்றன. நலத்தைப் பேணுதலும் பாராட்டுதலும் நல்ல வழிபாடாகிறது. கேட்டினை நிராகரித்தல் அல்லது உதாசீனனாய் இருத்தல் அம்பிகையின் வழிபாடாம். ஆதலால் பூஜைக்குரிய திரவியங்களை வைத்துக்கொண்டு வரையப்பட்டுள்ள ஸ்ரீ சக்கரத்தினிடத்து அம்பிகையை ஆவாஹனம் பண்ணி அவளைக் கிரியா விசேஷங்களோடு பூஜிப்பது மட்டும் வழிபாடாகாது. இயற்கையை ஆத்மசாதகன் எங்ஙனம் பொருள்படுத்துகிறான்? மக்களுள் நல்லவர்களோடும் கெட்டவர்களோடும் எத்தகைய இணக்கம் பண்ணுகிறான் ஆகியவை யாவும் சேர்ந்தே ஸ்ரீ சக்கரராஜனை வழுத்துதற்கேற்ற உபாயமுமாம். ஆகவே காணப்படுகின்ற யாவும் அம்பிகையின் மயமேயாம். சாதகனுடைய ஆத்மபரிபாகத்திற்கு ஏற்ப இவ்வுண்மை

உள்ளபடி அவனுக்கு விளங்குகிறது.

997. श्रीमत् – त्रिपुरसुन्दरी ஸ்ரீமத் திரிபுர சுந்தரீ — முப்புரங்களையும் அலங்கரித்துக் கொண்டிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள். முப்புரங்களாவன: பூலோகம், புவர் லோகம், சுவர்லோகம் என்பனவாம். இந்த மூன்று உலகங்களுள் பூலோகம் என இயம் பப்படுகின்ற மண்ணுலகின்கண் மக்களாகிய நாம் வசித்து வருகிறோம். பரிணமத்தில் மக்களைவிடச் சற்று பெரிய நிலைக்குப் பரிண மித்து வந்துள்ள கின்னரர்கள், தேவர்கள் ஆகியோர்கள் புவர்லோகத்தில் வசித்துவரு கின்றார்கள் என்று நூல்களில் நாம் படிக் கிறோம். சுவர்லோகம் அல்லது சொர்க்கம் என்பது இந்த இரண்டு உலகத்தவர்களும் நாடுகிற பெரிய நிலையாம். பூலோகமோ இன் பம், துன்பம் இரண்டும் நிறைந்தது. புவர் லோகத்தில் இன்பம் அதிகம் துன்பம் குறைவு. சொர்க்கத்தில் துன்பத்திற்கு இடமில்லை. இங்ஙனம் சாஸ்திரங்கள் சாற்றுகின்றன. இம் மூன்றனுள் பூலோகத்தை மக்களாகிய நாம் நன்கு அறிகிறோம். புவர்லோகம், சொர்க்க லோகம் என்பன கேள்வி அளவில் நமக்கு உள. உலகங்கள் அனைத்தும் கிட்டத்தட்ட திட்டத்தில் ஒன்றேயாம். எனவே பூலோ கத்தை நாம் சரியாக ஆராய்ச்சி பண்ணுகிற பொழுது ஏனைய உலகங்களின் அமைப்பும் ஓரளவு நம் அறிவுக்கு எட்டுகின்றது.

இன்பம் துன்பம் இரண்டும் நிறைந்துள்ள பூவுலகில் வேண்டியவாறு சௌந்தரியம் நிறைந்திருப்பது வெளிப்படை. எங்குத் திரும்பி எப்பொருளை இப்புவியின்கண் நாம் ஆராய்ந்து பார்த்தாலும் அதனிடத்து அழகு பொலிவது வெளிப்படை. வெறும் பாலைவனம் எனப் பகரப்பெறுவதிலும் ஒருவித அழகு நிறைந்திருக்கிறது. அமாவாசை இருட்டில் அழகு தன் போக்கில் பொலிகிறது. இனி செழிப்பு நிறைந்த சில பிரதேசங்களை மண் ணுலகில் பார்க்கின்ற பொழுது இது மண்ணு லகா அல்லது விண்ணுலகா என்னும் ஐயம் உண்டாகிறது. எது மனிதனுடைய மனதைக் கவரவல்லதோ அதைத் தெய்விகம் பொலி வதாகக் கருதித் தியானம் பண்ணவேண்டும் என்பது யோக சாஸ்திரத்தின் துணிபு. அக்கோட்பாட்டின்படி அன்னை பராசக்தி தானே இந்நிலவுலகாக வடிவெடுத்திருக்கிறாள். விவேகம் என்னும் கண்கொண்டு பார்ப்பவர் களுக்கு இந்நிலவுலகில் அன்னையின் சாந்நித்தி யத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை.

மானுடன் ஒருவன் ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளில் கால மெல்லாம் வசித்து வருகிறான். இம்மூன்று அவஸ்தைகளும் முப்புரங்களாக உருவகப் படுத்தி இயம்பப்படுகின்றன. இம்மூன்று அவஸ்தைகளுள் சுஷுப்தி என்பது கிட்டத் தட்ட ஜடநிலை போன்று இருக்கிறது. உண்மை யில் நல்லுறக்கத்தில் மனிதன் தன்னையறி யாது ஆத்ம சொருபத்தில் திளைத்திருக்கிறான். எனவே மனிதன் அனுபவிக்கின்ற மூன்று அவஸ்தைகளுள் அன்னை பராசக்தி யாண்டும் நிலைத்திருந்து ஜீவர்களுடைய வாழ்க்கைக்கு அழகையும், மங்களத்தையும் பொழிந்து வரு கின்றாள். ஆதலால் மூன்று அவஸ்தைகளிலும் மனிதன் இனிமையையும் அழகையும் கண்டு ரசித்து வருகிறான். இங்ஙனம் முப்புரமென இயம்பப்படும் மூன்று அவஸ்தைகளுக்கும் அன்னை பராசக்தி அழகை நல்கி வருகிறாள்.

புராண பூர்வமாக ஆராயுமிடத்துப் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் சேர்ந்து திரிமூர்த்தி எனவும் அன்னவர்களு டைய சரீரம் திரிபுரம் எனவும் இயம்பப்படு கின்றன. பிரபஞ்சம் முழுதும் ஒன்று சேர்ந்து திரிபுரமாகிறது. அப்படி எங்கும் நிறைந் துள்ள புவனங்களுக்குச் சோபையை அல்லது அழகை வழங்கிக் கொண்டிருப்பவள் திரிபுர சுந்தரீ எனப்பெயர் பெற்றுள்ளாள்.

998. श्री शिवा ஸ்ரீ சிவா — சிவம் வேறு சக்தி வேறு அன்று. சிவ என்னும் சொல்லைச் சிவா என இயம்புவோமானால் சிவனுக்குப் புறம்பாயில்லாத சக்திஎனப்பொருள்படுகிறது. சிவனுக்குரிய மகிமைகள் அனைத்தும் அம்பி கைக்கும் சொந்தம். ஒரு பொருளைச் சிவன் என ஆண்பாலாக வைத்தோ சிவா என்று பெண் பாலாக வைத்தோ வணங்கலாம். பால் வேற்று மையைத் தாண்டியுள்ள ஆத்மாவை ஆண்பா லாகவோ பெண்பாலாகவோ வைத்து வழிபடு கிற ஆத்மசாதகன் பால் வேற்றுமையைத் தாண்டி பரத்தில் ஒன்றுபடுகிறான்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (377)** *எத்தகைய குற்றத்திற்கும் இறைவனிடம் மன்னிப்புக்கேட்டால் அவன் அருள் செய்வான்; தெய்வத்தின் முன்னிலையில் தவறு செய்யலாகாது—இவை முரண்பாடுகள் அல்லவா? எப்படிப் பொருள்படுத்துவது?*

அறம் செய விரும்பு என்பது ஆன்ரோர் வாக்கு. ஆனல் அந்த விருப்பம் எல்லார்க்கும் உண்டாவதில்லை. ஆகையினல்தான் அந்த விருப்பத்தை உண்டுபண்ணி அதை வளர்க்க வேண்டும் என்னும் கோட்பாடு வந்துள்ளது. சைக்கிள் என்னும் உந்துவண்டி ஓட்டிப் பழகுகிறவன் ஆரம்பதசையில் தன் வண்டியை ஒரு குழிக்குள் ஓட்டலாகாது என்னும் சங்கல்பம் பண்ணுகிருன். ஆயினும் தான் எண்ணிய எண்ணப்படி நடந்துகொள்ள அவனுக்கு இயலுவதில்லை. எண்ணிக் கொண்டிருப்பதற்கிடையிலேயே, தன் வண்டியை ஒரு குழியினுள் ஓட்டித் தானும் கீழே வீழ்கிருன். அவன் எண்ணிய எண்ணத்திற்கும் செய்த செயலுக்குமிடையில் முரண்பாடு இருக்கிறது. ஆனல் இந்த முரண்பாட்டை மீளுதல்தான் வாழ்க்கைப் பயிற்சி. தவறு செய்ய வேண்டுமென்று யாரும் விரும்புவது இல்லை. ஆயினும் மக்கள் எல்லாரும் ஏதாவது தவறுகளைச் செய்து கொண்டுதான் இருக்கிருர்கள். The Spirit is building but the flesh is weak. நலத்தில் நிலைத்திருக்க வேண்டும் எனும் அவா எல்லார் உள்ளத்திலும் இருந்து வருகிறது. இந்த விருப்பத்திற்கிடையில் நெறிவழுவிப் போவது மனிதனிடத்துள்ள சிற்றியல்பின் கூறு ஆகும். கீழ்மையை அகற்றி நலத்தில் நிலைபெற்றிருப்பதுதான் வாழ்க்கையின் மேலாம் குறிக்கோள். பலதடவைகளில் நெறிவழுவிப் பிறகு நெறியில் நிலைபெறுவதுதான் வாழ்க்கையில் எல்லாருக்கும் அமைந்துள்ள போக்கு ஆகும். ஆகவே நெறிவழுவுவதற்கும் நெறியில் நிலைத்திருப்பதற்குமிடையில் முரண்பாடு இல்லை. செய்த குற்றத்திற்கு மனமார வருந்தி மீண்டும் அக் குற்றத்தைச் செய்வதில்லை என்று இறைவனிடம் மன்னிப்புக் கேட்பதன் வாயிலாகக் குற்றம் செய்தவன் திருந்தி அமைகிருன். சிறு குழந்தை ஒன்று எழுந்து நின்று நடக்க முயலுகிறது. ஆனல் பல தடவைகளில் அது வீழ்கிறது. வீழ்வதை முன்னிட்டுக் குழந்தை தன் முயற்சியை நிறுத்துவதில்லை. உடல் உறுதி பெற்றுன பிறகு குழந்தை வீழ்வதில்லை. உடலில் உறுதியைப் பெறுவதைவிட மிகக் கஷ்டமானது உள்ளத்தில் உறுதிபெறுவது. சான்ரோர்கள் உட்பட எல்லாரும் உள்ளத்தில் உறுதி பெற முயலுகின்றனர். ஒரு சிலர் அம் முயற்சியில் அதிவிரைவில் வெற்றி காண்கின்றனர். மற்றவர்கள் நெடுங்காலம் எடுத்துக் கொள்கின்றனர். அதன் பிறகாவது உள்ளத்தில் உறுதிபெற்று எண்ணியதை எண்ணியாங்கு சாதிக்கும் திறமை வந்தமைகிறது. ஆகவே முயற்சிக்கும் தோல்விக்குமிடையில் முரண்பாடு இல்லை. ஒவ்வொரு தோல்வியையும் தெய்வத்திடம் தெரிவிப்பதன் வாயிலாக மானுடன் ஒருவன் படிப்படியாக உள்ளத்தில் உறுதிபெற்று வருகிருன். இதுவே வாழ்க்கையின் குறிக்கோளாம்.

**கேள்வி: (378)** *கோவிலுக்குச் சென்று வருபவர்கள் கால் கழுவலாகாது என்பதன் கருத்தென்ன?*

கடைவீதிப் பக்கம் சென்று வருபவர்கள் கால் கழுவவேண்டும். அதில் பெரிய கோட்பாடு இருக்கிறது. வீதி எங்கும் கிடக்கிற குப்பை தூசிகளை மிதித்து வருகிற மனிதன் வீட்டுக்குள்ளே நுழைவதற்கு முன்பு பாதங்களைக் கழுவுதல் வேண்டும். ஆனல் கோயில் ஒன்று புனிதம் வாய்ந்தது. கோயிலுக்குள் கிடக்கும் பாததூளியிலும் தெய்விகம் திகழ்கிறது என்பது அறிஞர் நம்பிக்கை. அத்தகைய புனிதம் வாய்ந்த இடத்தில் நடந்துவருகிறவன் தன் வீட்டிற்குள்ளே நேரே செல்வதின் வாயிலாகப் பாதத்தில் படிந்திருக்கும் துகள்களின் வாயிலாகத் தூய்மையை வீட்டிற்குள்ளே எடுத்துச் செல்கிருன் என்பது நம்பிக்கை. ஆக இக்கொள்கை அவரவர் நம்பிக்கையை முன்னிட்டு வந்தது. இதை ஒருபெரிய வாழ்க்கைப் பிரச்னையாக எடுத்துக் கொள்ளவேண்டியது அவசியம் அன்று. அவரவர் கொண்டுள்ள தூய நம்பிக்கையே இது போன்ற செயலுக்குப் பிரமாணம் ஆகிறது.

**கேள்வி : (379) விரதங்களை அனுஷ்டிப்பதின் பயன் என்ன?**

மானுடன் ஒருவன் நன்கு கடைப்பிடிப்பதாகக் கொண்டுள்ள மேலாம் தீர்மானத்திற்கு விரதம் என்று பெயர். "எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார் திண்ணியராகப் பெறின்" என்பது பொய்யாமொழி. வாரத்தில் ஒருநாள் காலையில் உணவு உண்ணுதிருந்து தீவிரமாகக் கடவுள் வழிபாடுசெய்துவிட்டு நண்பகலில்தான் உணவு அருந்துவேன் என்னும் நல்ல திர்மானம் ஒரு விரதமாகிறது. இந்த விரதத்தை முறையாகக் கையாண்டு வருபவன் உறுதியான உள்ளம் படைத்தவனுகத் திருந்தி அமைவதைத் தானே கண்டுகொள்வான். ஆகவே நல்ல விரதம் ஒன்று எடுத்துக்கொள்வதும் அதை முறையாகக் கையாண்டு வருவதும் மனிதனுடைய முன்னேற்றத்திற்கு இன்றியமையாத கோட்பாடாம்.

**கேள்வி : (380) பக்தனுக்கும் தொண்டனுக்கும் வேறுபாடு என்ன?**

கடவுளிடத்துப் பேரன்பு வைக்கின்றவன் பக்தன். கடவுளுக்கென்றே பணிவிடை பண்ணுபவன் தொண்டன். ஒருவன் பக்தி யோகத்தில் ஈடுபடுகின்ருன். மற்றவன் கர்ம யோகத்தில் ஈடுபடுகின்ருன். பக்தியானது பராபக்தியாக வடிவெடுக்குமிடத்து ஆத்ம சாதகன் அந்தப் பேரன்பிலேயே ஊறிக்கிடக்கிருன். பகவானுக்காகப் பணிவிடை பண்ணவேண்டும் என்னும் கருத்து எழுதற்கு ஆங்கு இடமில்லை. பேரன்பின் விளைவாக உடல் சிலிர்க்கிறது; மேனி முழுதும் நடுங்குகிறது. கைகூப்பி வணங்கிய வண்ணமாக அந்தப் பக்தன் இருக்கின்ருன். கண்களினின்று தாரை தாரையாகக் கண்ணீர் வடிகிறது. உள்ளத்தினுள் இறைவனைத் தவிர வேறு சிந்தனை ஏதும் இடம்பெறுவதில்லை. இறைவனைப் பற்றிய பேருணர்ச்சியால் பக்தன் முற்றிலும் தன்னை மறந்தவனுக இருக்கின்ருன். அவனுடைய நாவில் எழுகின்ற சொற்கள் எல்லாம் இறைவனைப் பற்றியதாகவே இருக்கின்றன. இத்தகைய அதீத நிலையில் ஊறிக்கிடப்பவனுக்குப் பணிவிடை பண்ணுவதைப் பற்றிய எண்ணம் உள்ளத்தில் எழுதற்கோ அது செயலாக வடிவெடுப்பதற்கோ அவகாசம் இல்லை.

மற்று, தொண்டனுடைய பாங்கை உலகத்தவர்களுடைய வாழ்க்கையோடு ஒப்பிடலாம். பூ விற்று வாழும் மனிதன் ஒருவன் தன்னுடைய வயிற்றுப் பிழைப்பிற்காகப் பூக்கொய்கிருன். தொண்டன் ஒருவனும் பூக்கொய்கின்ருன். ஆனல் அவனுடைய மனப்பான்மை இவ்வுலக வாழ்வோடு சம்பந்தப்பட்டதன்று. கடவுளுக்காகவென்றே அவன் பூக்கொய்கிருன், மாலை தொடுக்கிருன். கோயிலில் விக்கிரகத்தில் எழுந்தருளப் பண்ணியிருக்கும் தெய்வத்திற்கு அதைச் சாத்துகிருன். அதில் அவன் பரமானந்தம் அடைகின்ருன். பிறகு உயிர்கள் அனைத்தையும் தான் வழிபடுகிற தெய்வத்தின் சொரூபங்களாகக் கருதுகின்ருன். அன்னவர்களுக்கு அவன் அரும்பணி ஆற்றுகின்ருன். ஆருயிர்களுக்குச் செய்கின்ற பணிவிடைகள் அனைத்தும் ஆண்டவனுக்கு உரியவைகளாக அவன் கருதுகின்ருன். உயிர்களுக்காக அரும்பணி ஆற்றுதலில் அவன் சலிப்படைவதில்லை. தன் சொந்த நலனைப் பற்றி அவன் நினைப்பதில்லை. உயிர்களுக்குப் பணிவிடை பண்ணுதலிலேயே அவன் பரமானந்தம் அடைகிருன்.

பக்தன், தொண்டன் ஆகிய இருவருக்கு மிடையில் பொது நிலை ஒன்று உண்டு. உலகத்தவர்கள் அல்லும் பகலும் தங்கள் சொந்த நலனிலேயே, அல்லது ஜீவிதத்திலேயே கருத்தைச் செலுத்தி வருகிருர்கள். மற்று பக்த யோகியும் கர்மயோகியும் அவரவர் செயலின் வாயிலாகச் சுயநலத்தை ஒழித்துத் தள்ளுகின்றனர். பரமனிடத்து வைத்த அன்பில் பக்தன் தன்னுடைய ஜீவபோதத்தைத் துடைத்துத் தள்ளுகின்ருன். ஆருயிர்களுக்குச் செய்கின்ற அரும்பணியே ஆண்டவனுக்குரிய அரும்பணியெனக் கருதி அந்த எண்ணத்தில் தன்னுடைய ஜீவபோதத்தைத் தொண்டன் துடைத்துத் தள்ளுகிருன்.

ஜீவபோதத்தைப் பரபோதத்தில் கரைத்து ஒடுக்குவது ஆத்ம சாதனத்தின் குறிக்கோளாகிறது. பக்தன் ஒருவன் இறைவனிடத்து வைத்துள்ள பேரன்பின் வாயிலாகத் தன் ஜீவ வியக்தியை ஒடுக்குகிருன். தொண்டனே ஆருயிர்களைப் பரமன் மயமாகப் பொருள் படுத்தி அவர்களுக்குச் செய்யும் பணிவிடையில் தன்னை முற்றிலும் மறந்தவனுகிருன்.

# ஸ்ரீமத் பாகவதம்

( சுவாமி ஸதானந்தர் )

பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் தம் தாய் தந்தை ஆசிரியர் ஆகியவர்களை வீழ்ந்து வணங்கினர். தம் நண்பர்களையும் உறவினர்களையும் ஆலிங்கனம் செய்தார். பொதுமக்களையும் அதிகாரிகளையும் கரம் கூப்பி வணங்கினர். அத்திரு முகத்தில் எப்போதும் யாரிடத்தும் மங்களமான புன்னகை திகழ்ந்துகொண்டிருந்தது. அவரவர்க்கு வேண்டிய பொருள்களை எல்லாம் கொடுத்தார். அவர்கள் அனைவருக்கும் தமது தண்ணருளைப் பொழிந்தார். முனிவர்களுக்கும் சான்றோருக்கும் அவரவர்களுக்குரிய மரியாதையைப் பகவான் செலுத்தினர். துவாரகாவாசிகள் இவ்விதம் பாக்கியவான்கள் ஆனர்கள். முதியோர்களின் அன்பும் ஆசிகளும், மற்றவர்களின் அன்பும் நல்லெண்ணங்களும், பகவானின் அருளும் யாவும் சேர்ந்து துவாரகைக்கு மிகப் பெரிய அருட்செல்வமாயிற்று. இங்ஙனம் அவர் துவாரகா பட்டணப்பிரவேசம் நிகழ்ந்தது. அவர் அகன்ற ராஜவீதிகளில் அழைத்துச் செல்லப்பட்டபோது அரண்மனை மாதர் அனைவரும் மாடிகளில் ஏறிக் கண்ணனைத் தரிசித்தார்கள். அவர்களுடைய கண்களும், முகங்களும் ஆனந்தத்தால் பிரகாசித்தன. அவர்கள் எப்போதும் கண்ணனையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆனாலும் அவர்களுக்கு அலுப்பே தோன்றவில்லை. அது என்றும் தணியாத தீராத ஆவலாக இருந்தது. கடவுளோடு சம்பந்தப்பட்ட எந்த விஷயத்திலாவது எந்த இந்திரியமாவது என்றைக்காவது சலிப்படையுமா? 'அரங்கனைக் காணுத கண் என்ன கண்? அவரைப் பற்றிக் கேளாத காதென்ன காது? அவரைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.' அவர் திருமார்பினில் சகல சௌபாக்கியங்களுக்கும் தலைவியும் தெய்வமும் ஆகிய ஸ்ரீ லக்ஷ்மி தேவி வாசம் பண்ணுகிருள். அவருடைய அதி மோஹனமான முகவிலாசம் கண்களுக்கு என்றும் பரமானந்த விருந்தாய் இருக்கிறது. அவருடைய அகன்ற புஜமோ பலமும் பராக்கிரமமும் வாய்ந்தது. நல்லாரை அது என்றும் காத்து வருகிறது. அவருடைய திருவடிகளோ பக்தர்களுக்கு ஒரே புகலிடமாய் அமைந்துள்ளது. ஆகையால் பக்தன் உள்ளத்தில் கண்ணனைப் பார்க்கும்தோறும் அவனிடத்து மேலும் அன்பையும் பக்தியையும் வளர்ப்பதாய்ப் பொங்கி எழுவதாய் அமைந்துவிடுகிறது. அதில் ஐக்கியப்படும்வரை, கரைந்துவிடும் வரை, தன் வியக்தியை இழக்கும் வரை அதன் தீவிரம் தணிவதில்லை.

பீதாம்பரதாரியும் (மஞ்சள் ஆடை உடுத்தியவன்) நீலமேக சியாமள வர்ணனும் வனமாவியும் ஆகிய அப்பிரபு எவ்வளவு அழகாக உள்ளார். அழகே கடவுள். அன்பே கடவுள். அறிவே கடவுள். வெண் கொற்றக் குடையின் கீழ் வெண்சாமரம் வீசப்பட்டவராய் அவர் கம்பீரமாய் நடந்துசெல்லும் காட்சி எவ்வளவு அழகாய் இருக்கிறது! மாடமாளிகைகளின் மேலே இருந்து அப்பிரபுவின் பேரில் அன்புடன் மலர்கள் சொரியப்பட்டன. மேகம் ஒன்றுக்குச் சூரியன் வெள்ளி விளிம்பு கட்டுகிறது. வான வில் அதற்கு அழகிய நிறமூட்டுகிறது. சந்திரன் மேகத்திற்கு இனிமையை, குளுமையைத் தருகிறது. நட்சத்திரங்கள் அதற்கு ஆபரணம் போன்று அழகு ஊட்டுகின்றன. மின்னலோ இங்ஙனம் எல்லாரும் அலங்கரித்த அப்பொருளைப் பளீரென்று எடுத்துக்காட்டித் திடீரென்று இருளில் மறைத்துக் கொண்டு கடகட என்று நகைக்கிறது. இதே போன்று ஆயிரம் மடங்கு பகவான் அழகாக சோபிக்கிருர். அழகு பகவானுக்கு அழகு செய்து அடிமை செய்து மகிழ்கிறது. இப்படிப் பவனிவந்த பகவான் தம் தந்தையாரின் அரண்மனைக்குள் பிரவேசித்தார். தம் தாய் தேவகியையும் மற்றும் பதினேழு மாற்றுந்தாய்களையும் தம் தலையை அவர்களுடைய பாதங்களில் வைத்து வணங்கினர். அந்த அன்னையரும் தங்கள் திருக்குமரனை அன்புடன் ஆலிங்கனம் செய்து அவர் தலையை ஆனந்தக் கண்ணீரால் நனைத்தார்கள். அவர்கள் தங்கள் மகனுகிய அப்பிரபுவைத் தங்கள் மடியில் அமர்த்தி அன்பு பாராட்டினர்கள். அன்பின் மிகுதியால் அவர்களின் மார்புகளில் பால் சுரந்தது. வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றை

யெல்லாம் வழங்கும் அப்பிரபு பிறகு தம் திரு மாளிகைக்கு எழுந்தருளினர். அது அழகில் ஒப்பற்றது. அதில் வகைவகையான அழகு பொருந்தி பயதினறுஆயிரம் தனித்தனி அந்தப் புரங்கள் இருந்தன. அவைகளில் அவருடைய பதினறு ஆயிரம் தர்ம பத்தினிகள் வாழ்ந்து வந்தனர். தங்கள் அன்புத் தெய்வம் இன்றி, மழையில்லாமல் வாடும் பயிர் போன்று ஏங்கி அவர்கள் சோபை இழந்திருந்தனர். அவர்கள் தபஸ்விகளைப்போல விரதானுஷ்டானம் இருந்து வந்தனர். தங்கள் அன்புத் தெய்வம் துவாரகைக்குத் திரும்பி வந்துள்ளார் என்று கேள்விப்பட்டது முதல் அவர்களின் அன்பும் ஆவலும் இன்னும் அதிகரித்தன. இப்போது பெருமான் தங்கள் முன்னே பிரத்யக்ஷமானதும் அவர்களுடைய மகிழ்ச்சியும் அன்பும் அளவு கடந்தவை ஆயின. கணந்தோறும் புதிய புதிய அழகுடன் சோபிக்கும் அவருடைய தாமரைத் திருவடிகளை அவர்கள் பார்த்துக்கொண்டே நின்றார்கள். ஒருவரிடமும் நிலைத்து நிற்காத செல்வத்தின் தேவியாகிய கமலா தேவி எந்தப் பாதங்களுக்கு யாண்டும் அன்புடன் பாத சேவை செய்து வருகிறாளோ அத்திருவடிகளை விட்டு யாருடைய மனதுதான் அப்பால் போகும்?

அரசர்கள் அசுரர்கள் ஆனர்கள். சுயநலமும், பேராசையும்,போகத்தில் நாட்டமும் பெருகின. அதன் விளைவாகப் படை பலத்தைப் பெருக்க வேண்டியதாயிற்று. அரசர்களின் போராட்டமும் படைபலப் பெருக்கமும் பூமிக்குப் பெருத்த பாரமாயின. தானாகவே விரோத பாவனை வளர்ந்தது. வனத்தில் காற்றினல் மூங்கில் மேல் மூங்கில் உரசி மூங்கிற் புதர்கள் தீப் பற்றிச் சாம்பலாகப் போவது போன்று அரச குலத்தினர் தமக்குள்ளேயே அடித்துக் கொண்டு மடிந்தனர். பூபாரம் இங்ஙனம் துடைக்கப்பட்டதும் உலகில் சாந்தியும் அமைதியும் பழையபடி நிலவின. தீயதெல்லாம் ஆழ்ந்ததும் அரன் நாமமே சூழ்ந்தது; வையகமும் துயர் தீர்ந்தது. இறைவன் செயல் இங்ஙனம் காலமெல்லாம் நிகழ்கிறது. இந்த மகா பாரத யுத்தமும் அங்ஙனம் நிகழ்ந்ததே ஆகும். இது இயற்கையின் நியதி, கடவுளின் செயல், கிருஷ்ணனின் லீலை என்பதை உணர்ந்து, பக்தர்கள் உருகி உருகி, அவரிடத்தும் பக்தியை வளர்க்கிறார்கள். அவர் மானுடவடிவெடுத்து வந்து மானுடன் போன்று விவகரிக்கிறபோது அவருடைய மேலான இயல்பை, சொருப லக்ஷணத்தை, சாதாரண மானுடர் அறிந்துகொள்வதில்லை. அவர் எந்தச் செயலாலும் பந்தப்படுபவர் அல்லர். பிருந்தாவனக் கோபிகாஸ்திரீகளிடத்திலும், துவாரகையில் பதினறுயிரம் மனைவிகளிடத்திலும் அவர் நடந்துகொண்டது, பழகியது எல்லாம் காமக் கேளிக்கை அன்று. சாதாரண மானுடர் காமக்கேளிக்கையில் வெகு எளிதில் சிக்கி விடுவார்கள். எல்லா இன்பங்களும், எல்லா ஆனந்தங்களும் அவரிடத்திருந்து வருகின்றன. ஆண்டவனை இன்பமுறச் செய்வதற்குப் புறத்தே ஒரு பொருள் வேண்டியதில்லை. அவர் தன்னில் தானய் என்றும் சத்-சித் ஆனந்த சொருபத்தில் இருப்பவர். அவருடைய இந்த மேலான நிலையே, இந்தப் பிரபஞ்சத்தில் யாண்டும் ஊடுருவி நிற்கிறது. இந்தப் பிரபஞ்சம் அவருடைய மாயை, விளையாட்டு, லீலை. அது பிரகிருதியின்செயல் என்று சொல்லப்படுகிறது. மனதுக்கு உணர்வும் அறிவும் ஆத்மாவினிடத்திருந்து வருகிறது. ஆயினும் மனது ஆத்மானந்தத்தை அறிந்துகொள்ள முடியவில்லை. அதேபோன்று பகவான் பிரகிருதியோடு சம்பந்தப்பட்டவராக இருந்தும் பிரகிருதியின் செயலில், குணத்தில் அவர் கட்டுப்பட்டவர் அல்லர். ஆண்டவனின் இந்த ஒப்பற்ற மேலாம் சொருபலக்ஷணத்தைப்பற்றி நினைப்பதே நல்ல தியானம் ஆகிறது.

## அத்தியாயம் 12

சௌனகர் கேட்டார்: ''ஓ சூதரே! அஸ்வத்தாமன் எய்த சக்தி வாய்ந்த பிரம்மாஸ்திரம் உத்தரையின் கர்ப்பத்தில் இருந்த பிண்டத்தையும் அழித்துவிட்டது. ஆனல் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் அன்புடன் அதற்கு உயிர் அருளினர். அந்தப் பிண்டம் எங்ஙனம் பேர் அறிவும் பேர் ஆற்றலும் பரந்த மனமும் படைத்த பரீக்ஷித்தாக வளர்ந்தது? அப்படிப்பட்ட பேராண்மைக்காரனுகிய பரீக்ஷித்து எங்ஙனம் மரணமடைந்தான்? அவன் மரணத்திற்குப் பிறகு அடைந்தகதி என்ன? நீங்கள் அன்புடன் இவைகளையெல்லாம் எங்களுக்கு

விளக்க வேண்டும். பரீக்ஷித்துச் சுகதேவரிடம் ஞான தீக்ஷை பெற்றவன். அதனல் அவனது மேலான மரணகால நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ள ஆவலாய் உள்ளோம்."

சூதர் சொன்னர்: "யுதிஷ்டிரன் தர்மானுஷ்டானத்தில் உச்ச நிலையில் இருந்தான். பக்தியும் சீலமும் வடிவெடுத்தவன் அவன். அவனது கிருஷ்ண பக்தி ஒப்பற்றது. ஆகையால் எப்போதும் அவன் இந்திரிய நிக்ரஹத்தில் உயர் நிலையில் எளிதில் நிலைபெற்றிருந்தான். அவனுக்கு எந்தவித உலக ஆசையோ, மயக்கமோ கிடையாது.அவனது தந்தையாரைப்போன்றே அவன் மிக்க தர்மமாகப் பரிபாலனம் பண்ணினன். அவனது ஆட்சியில் மக்கள் க்ஷேமமாக சந்தோஷமாக வாழ்ந்தார்கள். அவனது இகலோக சம்பத்து, சௌபாக்கியம், அவன் செய்த பல வேள்விகள், யாகங்கள், அவனுக்கு அமைந்திருந்த புண்ணியபலன், அவனுக்கு அமைந்த நல்லமனைவி,நல்ல சகோதரர்கள்,அவனது பெருமை மிக்க சக்கரவர்த்தி தன்மை, ஏகாதிபத்தியம், கடல் சூழ்ந்த அகன்ற ராஜ்யம் ஆகிய எல்லாமே தேவர்களையும் ஆசைப்படச் செய்கின்றவையாக இருந்தன. ஆனல் தர்மராஜா யுதிஷ்டிரனே இதில் எதிலும் கட்டுப்படவோ, ஆசைப்படவோ இல்லை. அவனது மனது எப்போதும் ஸ்ரீ கிருஷ்ண தியானத்தில் நிலைபெற்றிருந்தது.

பிருகு முனிவரின் புதல்வனே ! பத்து மாதம் தன் தாயின் வயிற்றில் கர்ப்பவாசம் செய்யும் போது அஸ்வத்தாமனின் பிரம்மாஸ்திரத்தின் கொடிய தீச்சுடர் பாலவீரனகிய பரீக்ஷித்தைத் தகித்துக் கொண்டிருந்தபோது அக்குழந்தை அங்குஷ்டப் பிரமாணமாத்ரமான ஒரு தெய்வ வடிவைக்கண்டது. அவ்வடிவம் மின்னல் ஒளி போன்ற பிரகாசமான பீதாம்பர தாரியாய் இருந்தது. அவருடைய கரங்கள் முழங்கால் வரை நீண்டிருந்தன. காதுகளில் அணிந்திருந்த குண்டலங்கள் நக்ஷத்திரம் போன்று ஒளி வீசின. அவருடைய கண்கள் கோபத்தினல் சிவந்திருந்தன. ஒரு கையில் கதையைத் தாங்கியிருந்தார். அதை நாலாபக்கமும் எளிதில் இடையருது சுழற்றிக் கொண்டிருந்தார். சூரியன் இருளைப் போக்குவது போன்று அத்திவ்விய புருஷன் தம் கதையினல் அந்தப் பிரம்மாஸ்திரத்தைச் செயலற்றது ஆக்கினர். கர்ப்பத்தில் இருந்த குழந்தை தனக்கு மிகச் சமீபத்தில் இங்ஙனம் சாகசம் புரிந்த அப்பரம புருஷன் யாராக இருக்கக்கூடும் என்று நினைத்தது. ஆனல் மனம் வாக்குக்கு எட்டாத அப்பரமபுருஷர், ஜகந்நாதர், ஒரு க்ஷணத்தில் மறைந்து விட்டார்.

பிறகு ஒரு நல்ல நாளில் எல்லாக் கிரகங்களும் உச்சத்தில் இருக்கும் சுபவேளையில் பாண்டுவின் வம்சத்தில் பாண்டுவுக்கு நிகரான பராக்கிரமம் வாய்ந்த பரீக்ஷித் பிறந்தான். அந்தக் கிரகங்களின் சேர்க்கை உலகுக்குப் பெரு நன்மை விளையப்போவதைக் குறிப்பதாக இருந்தது. யுதிஷ்டிரன் பேரன் பிறந்த இந்தச் செய்தி கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தான். அந்தந்தக் காலத்தில் செய்யவேண்டிய கிரியா விசேஷங்களை நன்கு அறிந்த யுதிஷ்டிரன் தக்கவர்களைக் கொண்டு ஜனனக் கிரியைகளையெல்லாம் முறையே செய்து வைத்தான். அக்குழந்தை எல்லாருடைய ஆசிகளையும் பெற்றுத் திகழ்ந்தது. அரசர்களின் வழக்கப்படி வேண்டியவர்க்கு வேண்டிய தானங்களை யெல்லாம் தந்தான். மகிழ்ச்சியடைந்த சான்ருேர்கள், "குரு வம்சத்தில் தலைசிறந்தவனே, பெருமை மிக்க உன் வம்சம் அனேகமாக நிர்மூலமாகிற வேளையில் உங்கள் பேரில் உள்ள பேர் அன்பினல் பகவான் இப்பாலகனைக் கருவில் காத்தார். பகவானின் கருணையினல் காப்பாற்றப் பட்ட இப்பாலகனுக்கு விஷ்ணுதத்தன் எனப் பெயரிடுவாயாக. இவன் ஜயமின்றிச் சிறந்த வீரனகவும் ஆச்சரியமான பெரிய பக்தனகவும் விளங்குவான்" என்ருர்கள்.

யுதிஷ்டிரன் கேட்டார்: "உத்தமர்களே! எங்கள் உத்தமமான முன்னோர்கள் கடைப்பிடித்த செந்நெறியை, உயர்ந்த ராஜதர்மத்தை இப்பாலகன் நிறைவாய்க் கடைப்பிடிப்பானு?"

ரிஷிகள் பகர்ந்தனர்: "குந்தியின் மைந்தனே! இப்பாலகன் மிக உயர்ந்த அரசன் ஆவான். சூரிய குல அரசர்கள் இக்ஷ்வாகு, ஸ்ரீ ராமச்சந்திரன் போன்று இவனும் மன்னுயிரைக் காப்பதில் மிகவும் கருத்தாய் இருப்பான். தன் சரீரத்தைக் கொடுத்து ஒரு பறவையைக் காத்த சிபிச் சக்கரவர்த்தி போன்று மக்களைப் பாதுகாப்பான். பரதனைப் போன்று கீர்த்தி

மிக்கவனாய் விளங்குவான். வில்வித்தையில் தன் பாட்டனார் அர்ஜுனனுக்கும், கார்த்தவீரியார் ஜுனனுக்கும் சமானமானவனாக விளங்குவான். தைரியத்தில் சிம்மம் போன்றும் க்ஷமையில் பூமிதேவி போன்றும், சகிப்பில் பெற்றோர் போன்றும், பாரபக்ஷமற்ற தன்மையில் பிரம்ம தேவர் போன்றும் விளங்குவான். சிவனாரைப் போன்று அவனிடம் எளிதில் அணுகவும் கோரியதைப் பெறவும் முடியும். ஹிமயமலை எங்ஙனம் பக்தர்களுக்கு சாந்தியும் அமைதியும் வழங்குகிறதோ அங்ஙனம் பக்தர்களுக்கும் நல்லவர்களுக்கும் அவன் துணையாக இருப்பான். ஸ்ரீகிருஷ்ணனைப் போன்று எல்லா உயிர்களுக்கும் ஒரே கதியாய், புகலிடமாய், பாதுகாப்பாய் இருப்பான்.

ஸ்ரீகிருஷ்ணனைப் போன்று எல்லாத் தெய்விகக் குணங்களும் வாய்க்கப் பெற்றவனாய், பரந்த மனதில் நந்திதேவரைப் போன்றும், பக்தியில் பிரஹ்லாதனைப் போன்றும் அவன் விளங்குவான். அவன் அநேக அஸ்வமேதயாகங்கள் செய்வான். ராஜரிஷி பரம்பரை இவன் முதலாக ஆரம்பமாகும். தீயவர்களைத் தக்கபடி தண்டிப்பான். உலக நன்மையின் பொருட்டுக் கலியையும் தண்டிப்பான். ஜீவிதத்தின் கடைசியில் தக்ஷன் என்கிற பாம்பு தீண்டி மரணமடைவான் என்கிற சாபம் உண்டாகும். அதைக் குறித்துச் சிறிதேனும் மனம் கலங்காதவனாய் இவ்வுலக இன்பங்களையும், ராஜ சம்பத்தையும் மிக எளிதில் துறந்துவிட்டுக் கிருஷ்ண ஸ்மரணையில் தன் மனதை நிலை நிறுத்த உதவியாய் சுகதேவர் பாகவதம் சொல்லக் கேட்பான். இகலோகத்தில் எவ்வளவு சிறப்புற்றவனோ அதே அளவில் அவைகளைத் துறத்தலிலும், மனதைக் கிருஷ்ணனிடம் நிலை நிறுத்துவதிலும் அவன் ஒப்பற்றவன். விஷ்ணுதத்தன் இங்ஙனம் மிக மேலான பிரம்ம நிர்வாண நிலை எய்துவான்.'' முக்காலமும் அறிந்த ரிஷிகள் இங்ஙனம் பகர்ந்து குழந்தையை ஆசீர்வதித்துவிட்டு, யுதிஷ்டிரனால் வழுத்தப்பட்டவர்களாய்த் தம் இருப்பிடம் சென்றார்கள்.

அபிமன்யுவின் மகன் உலகில் ஜனித்ததும் அவன் காண்கிற மானுட வடிவங்களை எல்லாம் கூர்ந்து நோக்கித் தான் மாதாவின் கர்ப்பத்தில் இருந்தபோது பார்த்தவர் இவரா என்று பரீக்ஷிப்பானாம். அவனது இத்தகைய நினைப்பினால் இப்பாருலகில் அவன் பரீக்ஷித் எனப் பிரசித்தி பெற்றான். அவனது அன்புடைய பாட்டனார்களால் பாராட்டப்பட்டவனாய் அவன் வளர்பிறைச் சந்திரன் போல வளர்ந்து வந்தான். பரீக்ஷித் இயல்பிலேயே பக்தராஜனாக இருந்தான். பால்யத்திலேயே அவன் காட்டிய பக்தியும் பண்பும் முதியோர்கள் அனைவரையும் அவனிடம் பேரன்பு கொள்ளச் செய்தன.

நியாயமான வரிகள் மூலமும் தண்டனையாக விதிக்கப்பட்ட அபராதங்கள் மூலமும் யுதிஷ்டிரன் அரசாங்க நிர்வாகத்தை நடத்திவந்தான். அப்போது அஸ்வமேதயாகம் ஒன்று செய்ய வேண்டும் என யுதிஷ்டிரன் விரும்பினான். ஆனால் அதற்குத் தேவையான நிதி ராஜாங்கத்தில் இல்லை. அதற்கு வேண்டியிருந்த நிதியைத் திரட்டுவதற்கு ஆலோசித்தான். அப்போது ஸ்ரீகிருஷ்ணன் செல்வத்தை நாடி வடக்கே போகும்படி பாண்டவர்களுக்கு ஆலோசனை கூறினான். தருமராஜனால் பெரிய வேள்வி ஒன்று செய்யப்பட்டபோது அந்தச் சமயம் சேகரிக்கப்பட்ட தங்கப் பாண்டங்கள், பொருள்கள் எல்லாம் எங்கு மறைந்துகிடக்கின்றனவோ அந்த இடத்திலிருந்து அவைகளை மறுபடியும் யாககாரியத்துக்குக் கொண்டு வரும்படி கிருஷ்ணன் கூறினான். பாண்டவர்களும் அங்ஙனமே செய்து அஸ்வமேத யாகத்தை முடித்தார்கள். மகாபாரத யுத்தத்தில் அழிந்த போர்வீரர்களின் நன்மைக்காக இங்ஙனம் மூன்று அஸ்வமேத யாகங்களை யுதிஷ்டிரன் செய்து முடித்தான். ஒவ்வொரு தடவையும் ஸ்ரீகிருஷ்ணனை அந்த யாகத்துக்கு அன்புடன் அழைத்தார்கள். அவரும் அன்புடன் வந்து யாகத்தை மங்களமாய் நடாத்தி வைத்தார். அன்புடையவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க ஸ்ரீகிருஷ்ணன் ஒவ்வொரு தடவையும் வேள்விக்குப் பிறகு சில நாட்கள் ஹஸ்தினபுரத்தில் தங்கினார். துவாரகைக்குத் திரும்பிப் போக மனம் கொண்டவராய்ப் பகவான் திரௌபதியிடமும் யுதிஷ்டிரனிடமும் விடைபெற்றுக் கொண்டு, அர்ஜுனனும், யாதவர்களும் உடன் வரத் துவாரகைக்குப் புறப்பட்டார்.

# நாமதேவர் சரிதம்

பஜனைக்குப் பெயர் பெற்றது பண்டரிபுரம். பண்டரிபுரம் என்றாலே பக்தர்களின் கூட்டமும் பஜனையும் மனக்கண்முன் நிற்கின்றன. சந்திர பாகா என்னும் நதியின் கரையில் அது அமைந்திருக்கிறது. அவ்வூரில் தாம்சேட்டி என்னும் பக்தர் ஒருவர் இருந்தார். அவர் நற்குணங்கள் யாவும் வாய்க்கப் பெற்றவர். தையல் வேலை செய்து குடும்பம் நடாத்தி வந்தார். அவருக்குக் குணபாய் என்னும் பதிவிரதை இருந்தாள். அவர்களிருவரும் இல்லறமென்னும் நல்லறத்தை இனிது நடாத்தி வந்தார்கள்.

பண்டரிபுர நாதனுக்கு நாள்தோறும் நைவேத்தியம் படைத்து வருவது வழக்கம். தாம்சேட்டி தம் தொழிலாகிய தையல் தொழிலில் மனதை முழுவதும் செலுத்துவார். தையல் வேலை முடிந்ததும் தம் மனதைப் பண்டரிநாதனிடம் செலுத்துவார். இவ்வாறு தம் கடமையிலும் பகவத் பக்தியிலும் தீவிரமாக ஈடுபட்டு வந்தார். அவருக்கு வயது அறுபது ஆயிற்று. அவர் மனைவிக்கு ஐம்பது வயதாயிற்று. ஆனால் அவ்விருவருக்கும் மகப்பேறு எதுவும் வாய்க்கவில்லை. தமக்கு ஒரு மகப்பேறு வேண்டுமென்று பண்டரிநாதனிடம் தாம்சேட்டி பிரார்த்தனை செய்து வந்தார். தாம்சேட்டி சந்திரபாகா நதியில் நீராடுவதும் ஈரவஸ்திரத்துடன் பண்டரிநாதன் ஆலயம் சென்று பண்டரிநாதனை வழிபாடு செய்வதும் தவறாமல் நிகழ்த்தி வந்தார். கணவன் நித்திரையைவிட்டு எழுவதற்கு முன்பே குணபாய் எழுந்திருந்து கணவனுக்கு முன்பு ஆலயதரிசனம் செய்துவிட்டு வந்துவிடுவாள். ஒழுக்கம் நிறைந்த குடும்பவாழ்வு குற்றமுடையதாகாது. பக்தியுடன் குடும்ப வாழ்வு வாழ்ந்து வருபவர்கள் பகவானுடைய அருளுக்குப் பாத்திரமாகிறார்கள். சீலமும் தவமும் உடையவர்களுக்குத்தான் சத்புத்திரன் தோன்றுகின்றான். தாம்சேட்டியும் குணபாயும் புத்திரபாக்கியம் இல்லை என்ற குறை உடையவர்களாக இருந்தார்கள். அவர்களுடைய குறையைப் போக்குவதற்கு உத்தவரைத் தாம்சேட்டிக்குக் குழந்தையாகப் போகும்படி பகவான் ஆக்ஞாபித்தார். "பூலோகத்தில் இருக்கும்பொழுதும் என் உள்ளத்தில் பகவத் சிந்தனை நீங்காமல் இருக்க வேண்டும். இறவாத இன்ப அன்பை என் உள்ளத்தில் நிலைநிறுத்துவதோடு உம் காட்சியும் எனக்கு அடிக்கடி கிடைக்கவேண்டும். பூலோக வாழ்வில் நான் இருக்கும்பொழுது என்னுடன் கூட இருந்து நீங்கள் உண்ண வேண்டும்" என்னும் வரங்களை உத்தவர் பகவானிடம் கேட்டுக்கொண்டார். பகவான் அவருக்கு அவ்வரங்களைத் தந்ததோடு "பூலோகத்தில் நீ இருக்கும்பொழுது உனக்குத் தோழனாகவும் பணியாளனாகவும் இருப்பேன்" என்றும் கூறினார். இதைக் கேட்டு உத்தவர் மகிழ்ச்சியடைந்து ஓர் அழகுள்ள குழந்தையாக வடிவெடுத்து ஒருசிறு பெட்டியில் தங்கி சந்திர பாகா நதியில் மிதந்துகொண்டு தாம்சேட்டி இருக்கும் இடத்துக்கு வந்தார். நதியில் குழந்தையோடுகூடிய பெட்டி ஒன்று தம்மை நோக்கி வருவதைப் பார்த்து மகிழ்ச்சியடைந்த தாம்சேட்டி பெட்டியிலிருந்த குழந்தையை எடுத்து மார்புடன் அணைத்துக்கொண்டார். உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்கக் குழந்தையை எடுத்துக்கொண்டு வீட்டுக்கு ஓடினார். வீட்டுக்குள் சென்று குழந்தையைத் தம் மனைவி குணபாயிடம் கொடுத்தார். 'பண்டரிநாதன் கிருபையால் இவ்வழகிய குழந்தை சந்திரபாகாநதியில் மிதந்து வந்து நமக்குக் கிடைத்தது' என்று கூறினார். குணபாயும் மிக்க ஆனந்தம் மேலிட்டவளாய்க் குழந்தையை வாங்கி உச்சி மோந்து முத்தமிட்டாள். தம்பதிகள் இருவரும் பகவானருளால் குழந்தைக்கு நாமதேவர் என்னும் நாமமிட்டுப் பந்துமித்திரர்களுக்கும் அதிதிகளுக்கும் விருந்தளித்துக் குழந்தைக்கு நாமகரணம் சூட்டும் விழாவைச் சிறப்பாக நடாத்தினார்கள். குழந்தையை மிகவும் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார்கள்.

நாமதேவருக்கு வயது ஐந்து ஆயிற்று. சிறுவர்களுடன் சேர்ந்து துள்ளி விளையாடிக் களிப்புற்றிருந்தார். ஒருநாள் தாம்சேட்டி வெளியூர் செல்லவேண்டியிருந்தது. பாண்டுரங்கனுக்கு நைவேத்தியம் செய்யும் பொறுப்பைத் தம் மகன் நாமதேவரிடம் ஒப்படைத்துச் சென்றார். தாம் திரும்பி வரும்வரையில் பண்டரிநாத

னுக்கு நைவேத்தியம் செய்யும் பணியைப் பக்தி பூர்வமாகச் செய்யவேண்டுமென்று நாம தேவரிடம் கூறிவிட்டுச் சென்றார்.

தாயார் நைவேத்தியம் தயார்செய்து தன் மகன் கையில் கொடுத்து மகனிடம் பகர்ந்ததாவது: "அப்பா, மகனே! நைவேத்தியத்தை எடுத்துக்கொண்டு பண்டரிநாதனுடைய திவ்ய சன்னிதானத்துக்குச் செல்லுவாயாக. நீ வழியில் எங்கும் தங்கக்கூடாது. பண்டரிநாதனுடைய திருநாமத்தை உச்சரித்துக் கொண்டே செல்லவேண்டும். உன் தந்தை சொன்ன முறையில் நீ பண்டரிநாதனுக்கு நைவேத்தியம் படைத்துப் பிறகு அப்பிரசாதத்தை வீட்டுக்குப் பத்திரமாகத் திருப்பிக் கொண்டு வரவேண்டும்." இங்ஙனம் அறிவுரை கூறி நாமதேவரை பண்டரிநாதன் சந்நிதானத்துக்குக் குதுபாய் அனுப்பி வைத்தார். நாமதேவர் 'பாண்டுரங்கா பண்டரிநாதா' என்று பஜனை செய்துகொண்டே தெருவில் சென்றுகொண்டிருந்தார். தெருவில் பந்தாடிக் கொண்டிருக்கும் பாலர்களைக் கண்டதும் ஆனந்தமடைந்தவராகத் தம்மை மறந்து பாலர்களுடைய விளையாட்டைப் பார்த்துக்கொண்டிருந்தார். பாலர்கள் விளையாடிய பந்து நைவேத்தியத் தட்டின்மேல் வந்து விழுந்தது. நாமதேவர் பந்தை எறிந்த சிறுவர்கள் மீது கோபம் கொண்டார். அவர்களைத் திட்டவும் செய்தார். சிறுவர்கள் அவருக்கு எதிராகச் சண்டைக்குக் கிளம்பினார்கள். நாமதேவர் நைவேத்தியத் தட்டைத் திண்ணையில் வைத்து விட்டு அச்சிறுவர்களிடம் சண்டைபோட ஆயத்தமானார். வீட்டுக்குள்ளிருந்த தாயார் இதை அறிந்து நாமதேவரைக் கடிந்துகொண்டு வீட்டிலிருந்து வெளியே வந்தார். தாயார் வெளியில் வருவதைப் பார்த்த நாமதேவர் நைவேத்தியத் தட்டை எடுத்துக்கொண்டு பாண்டுரங்கன் சந்நிதிக்கு ஓடினார். குதுபாய் "பிறர் தீண்டிய நைவேத்தியத்தைப் பகவானுக்கு எடுத்துக்கொண்டு போகாதே. அதைத் திருப்பிக் கொண்டு வா. வேறு நைவேத்தியம் தயார் செய்து தருகின்றேன்" என்று கூவி அழைத்தார். தாயார் கூறியதைக் காதில் போட்டுக்கொள்ளாது நாமதேவர் வெகு வேகமாகப் பண்டரிநாதன் ஆலயத்துக்குச் சென்று அங்குப் பண்டரிநாதன் முன் நைவேத்தியத்தைப் படைத்துத் தூப தீபங்களைக் காட்டி நைவேத்தியத்தை எடுத்து உண்ணுமாறு பாண்டுரங்கனைப் பிரார்த்தித்தார். இவர் எவ்வளவு பிரார்த்தித்தும் பாண்டுரங்கன் நைவேத்தியத்தை எடுத்து உண்ணவில்லை. "நான் கொண்டுவந்துள்ள இந்த நைவேத்தியம் அசுத்தமாய்விட்டதென்று நீ உண்ணவில்லை போலும். ஆனால் நான் புதிய நைவேத்தியத்துக்குத் தாயாரிடம் சென்றால் தாயார் என்னைச் சித்திரவதை செய்துவிடுவாள். ஆகையால் உன் குழந்தையின் மீது கருணை வைத்து நைவேத்தியத்திலிருந்து ஒரு பிடி அன்னமாவது எடுத்து உண்ணவேண்டும்" என்று கள்ளம் கபடமற்ற உள்ளத்துடன் கல்லும் உருகுமாறு கேட்டுக்கொண்டார். பாண்டுரங்கனுடைய காதுக்குப் பக்கத்தில் சென்று "பண்டரிநாதா! பாண்டுரங்கா! பாண்டவ தூதா! என்னுடைய விண்ணப்பம் உன் காதில் விழவில்லையா? நான் எவ்வளவோ கெஞ்சிக் கேட்டும் நீ ஒரு பிடி அன்னமும் உண்ணாதிருக்கின்றாய். எல்லா மக்களும் உன் குழந்தைகளல்லரோ? அவர்கள் கைப்பட்ட உணவை நீ புசிக்கலாமன்றோ? உனக்கு ஜாதி பேதம் ஏது? ஒருவேளை நைவேத்தியம் காலம் தவறி வந்துவிட்டதோ அல்லது உனக்குப் பசி இல்லையோ? நான் படைத்துள்ள நைவேத்தியத்தில் என்ன குற்றம் உள்ளது? குற்றமிருந்தால் அது என்ன குற்றம் என்று என்னிடத்தில் சொல்லலாகாதா?" என்று பலவாறு கூறியும் பண்டரிநாதன் அசையாதிருந்தார். நாமதேவர் முரட்டுத் தனத்தைக் காட்ட ஆரம்பித்தார். "பாண்டுரங்கா! நான் வெகு நேரமாய் வருந்தி அழைத்தும் நீ எழுந்தருளி உண்ணாதிருக்கின்றாய். இனி நீ உணவு உண்ணாவிட்டால் என் உயிர் இருக்காது. என் தலையை உன் பாதங்களில் மோதி உடைத்துக்கொள்ளப் போகின்றேன்" என்று கூறி இறைவனுடைய பாதங்களில் தலையை மோதிக் கொள்ள யத்தனித்தார். அப்பொழுது பண்டரிநாதன் "நாமதேவா! உன் பக்தியைச் சோதிக்கவே தாமதம் செய்தேன். இனி வருந்த வேண்டாம். உனக்குப் பசியாய் இருக்கின்றதா? உன்னுடைய திவ்விய கரத்தினால்

அன்னத்தை எடுத்து என் வாயில் வை" என்று பகவான் வாயைத் திறந்தார். நாம தேவர் தம் வலக்கரத்தால் அன்னத்தை எடுத் துப் பகவானுக்கு ஊட்டப் பகவான் நாம தேவருக்குத் தம் திருக்கரங்களால் அன்னத்தை எடுத்து ஊட்டினர். நாமதேவர் மேனி முழு வதும் சந்தனக்காப்பு பூசி "இன்றுபோய் நாளை மறுபடியும் நைவேத்தியம் கொண்டு வா" என்று அனுப்பிவைத்தார். நாமதேவர் வெறும் தட்டை எடுத்துக்கொண்டு தாயிடம் சென்று "அம்மா! இன்றைக்குப் பகவான் நைவேத்தி யத்தை உண்பதற்குக் காலதாமதம் செய்து விட்டார். ஆகையால் நீ என் மீது கோபம் கொள்ளாதே. பகவான் அளித்த பீதாம்பரத்தைப் பார்" என்று தாம் கட்டி யிருந்த பீதாம்பரத்தையும் காட்டினர். பக வான் அணிந்திருந்த பீதாம்பரத்தை நாம தேவர் அணிந்திருந்ததையும் நைவேத்தியத் தட்டுக் காலியாயிருந்ததையும் பகவானுக்குச் சாத்தியிருந்த பூமாலை நாமதேவர் மேனி யில் இருப்பதையும் பார்த்துக் குணபாய் கோபப்பட்டாள். "அடா நாமதேவா! உண் மையைச் சீக்கிரம் சொல். தட்டிலிருந்த பிர சாதம் எங்கே? பகவானுடைய பீதாம்பரம் உனக்கு எப்படிக் கிடைத்தது? உன் மேனிமீது எப்படிப் பூமாலை வந்தது?" என்று அதட்டினள். "அம்மா! நான் உண்மையைத்தான் கூறுகின் றேன். பகவான்தான் நைவேத்தியப் பதார்த் தங்களைச் சாப்பிட்டார். எனக்குப் பசியாய் இருந்தமையால் நானும் கொஞ்சம் சாப்பிட் டேன். என் வயிறு நிறைந்திருப்பதைப் பார். எனக்கு இனி உணவு வேண்டியதில்லை" என் ரூர். "பகவான் நைவேத்தியத்தைச் சாப்பிட் டார் என்று கூறுகின்ருயே. நீ வயிறு நிறைய முழுதையும் சாப்பிட்டுவிட்டுப் பகவான் சாப் பிட்டார் என்று கூறுகின்ருய். சிறு வயதி லேயே பொய் பேச ஆரம்பித்துவிட்டாயா?" என்று கோபத்தோடு கோல் ஒன்றை எடுத்து நாமதேவரை அடிக்கப் போனர். நாமதேவர் வீட்டைவிட்டு வெளியே ஓடிவந்து "அம்மா! நான் என்ன குற்றம் செய்தேன்? எப்பொழு தும் நான் உண்மைதான் பேசுவேன். பண்டரி நாதன் என்னை நெடுநேரம் அழச் செய்து பின் உணவருந்தினர். அவர் என்னை வேண்டிக் கொண்டதன்பேரில் நானும் சிறிது புசித்தேன். நீ உண்மையை அறிந்துகொள்ளாமல் கோலை எடுத்து என்னை அடிக்க வருகின்ருய்" என்று அழுதார். "உன் தந்தையார் வந்ததும் உனக்கு நல்ல தண்டனை கொடுக்கச் சொல்கின்றேன்" என்று குணபாய் கூறிவிட்டுப் பகவானுக்குப் புதிய நைவேத்தியத்தைத் தயார் செய்யப் போனள்.

வெளியூர் சென்றிருந்த தாம்சேட்டி திரும்பி வந்தார். வீட்டுக்கு வெளியே நின்று கொண்டி ருந்த நாமதேவரை எடுத்து மார்புடன் அணைத் துக்கொண்டார். "குழந்தாய்! பண்டரிநாத னுக்கு நைவேத்தியம் படைத்தாயா?" என்று கேட்க "நான் நைவேத்தியம் செய்து வந்தேன்" என்று நாமதேவர் பதில் கூறினர். நாம தேவரைத் தூக்கிக்கொண்டு தாம்சேட்டி வீட் டுக்குள் நுழைந்தார். குணபாய் நிகழ்ந்ததைத் தாம்சேட்டியிடம் கூறினர். கடவுளுக்கு அபச் சாரம் பண்ணியதற்காக நாமதேவர்மீது தாம் சேட்டி கோபம் அடைந்தார். தந்தையின் கோபத்துக்குப் பயந்து நாமதேவர் வீட்டை விட்டு வெளியேஓடினர். தந்தையார் அவரைத் துரத்திக்கொண்டு ஓடினர். நாமதேவர் ஆல யத்துக்குள் புகுந்து பண்டரிநாதன் பின்னல் போய் மறைந்து கொண்டார். தாம்சேட்டி மகனைப் பின் தொடர்ந்து அங்குச் சென்ருர். தாம் இருக்கும் இடத்தை நோக்கித் தந்தை யார் வருவதைப் பார்த்த நாமதேவர் "இப் பண்டரிநாதன்தான் நான் படைத்த நைவேத் தியத்தைச் சாப்பிட்டார்" என்ருர். "சரி, பகவான் அணிந்திருக்கிற பீதாம்பரத்தை நீ ஏன் அணிந்திருக்கின்ருய்?" என்ருர். "பக வானே எனக்கு அணிவித்தார்" என்ருர் நாம தேவர். "பகவான் நைவேத்தியத்தை அருந் தியது உண்மையானல் மீண்டும் ஒருமுறை நைவேத்தியத்தைப் பகவானுக்குப் படைத்து அதை அருந்தும்படி செய்" என்ருர் தாம் சேட்டி. "அப்படியே செய்கிறேன்" என்று கூறிவிட்டு வீட்டுக்குச் சென்று தாயார் செய்து வைத்திருந்த புதிய நைவேத்தியத்தைக் கொண்டு வந்து பகவானுக்குப் படைத்தார். பகவானை உண்ணும்படி பகவான் பாதங்களி லும், சிரசிலும் புஷ்பங்களைச் சொரிந்து, தூப தீபம் காட்டித் தோத்திரம் செய்தார். ஆனல்

பகவான் அருந்தவில்லை. "பண்டரிநாதா, என் பிதா முன்னிலையில் என்னை மெய்யனுக்கு வாயாக. நீ உணவு அருந்தாவிட்டால் தந்தை யார் என்னைக் கொன்று விடுவார். அவர் கையால் மடிவதைவிட உன் திருவடியில் என் தலையை மோதி உயிரைப் போக்கிக் கொள் கின்றேன்." என்று கூறித் தலையைப் பகவான் பாதங்களில் மோதிக்கொள்ளப் போனார். பண்டரிநாதன் அங்குக் காட்சி தந்து நாம தேவரின் கைகளைப் பிடித்துக்கொண்டு "என் அருமைப் பாலவே! பக்தியிற் சிறந்த சீலனே! உன் பக்திப் பிரதாபத்தை அறியாது உன் தாயும் தந்தையும் உன்னை அடிக்க முன் வந் தார்களோ! அவர்களிடமிருந்து தப்பிக்கும் பொருட்டு என்னிடத்தில் ஓடி வந்தாயோ? உன் விருப்பப்படியே நைவேத்தியத்தை உன் கையால் எடுத்து என் வாயில் வை. முன்பு உண்டது போன்று இப்பொழுதும் உண்கின் றேன்" என்று பகவான் வாயைத் திறந்தார். நாமதேவர் நைவேத்தியத்தை எடுத்து ஊட்ட அதைப் பகவான் அருந்திவிட்டு முன்போலவே விக்கிரகத்தினுள் சென்று மறைந்தார். இந் நிகழ்ச்சியை நேரில் பார்த்த தாம்சேட்டி ஆச் சரியமடைந்தவராகப் பகவானைப் பார்த்துப் "பாண்டுரங்கா! ஸ்ரீ ரங்கா! நாமதேவருடைய பக்தியின் மகிமையை அறியாது அவருக்குப் பொய்யனென்று பட்டம் கட்டி விட்டேன். அவரை வாயில் வந்தபடி வைதும் விட்டேன்" என்று கூறி ஓவென்று அழுதார். அப்பொழுது பகவான் அசரீரியாய் இருந்து "தாம்சேட்டி! இன்று முதல் நானும் நாமதேவரும் ஒன்று என்பதை அறிந்து அவருக்கு அன்புடன் சேவை செய்து வருவாயாக!" என்று திரு வாய் மலர்ந்தருளினர். தாம்சேட்டி நாமதேவ ருக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். நாமதேவரை அழைத்துக்கொண்டு வீட்டுக்குச் சென்று ஆலயத்தில் நிகழ்ந்ததையெல்லாம் விரிவாக மனைவிக்கு எடுத்துக் கூறினர். தாயார் நாமதேவருடைய பக்தியைக் கேட்டு அன்றுமுதல் நாமதேவரைப் பூஜிக்கத் தொடங் கினர். நாள்தோறும் பக்தி சிரத்தையுடன் நைவேத்தியம் தயாரித்து நாமதேவரிடம் ஒப் படைப்பார். அந்நைவேத்தியத்தை நாமதேவர் எடுத்துச் சென்று பகவானுக்கு ஊட்டுவித் துத் தாமும் உண்டு ஆனந்தமுற்றிருந்தார்.

நாமதேவருக்கு வயது பதினறு ஆயிற்று. அவருக்கு மணம் முடிக்கவேண்டும் என்று தாம்சேட்டியின் கனவில் இறைவன் கூறினர். அவர்கள் குலத்தில் தோன்றி வளர்ந்து வரும் ராஜாபாய் என்னும் பெண்ணை மணம் பேசி முடிக்குமாறும் கனவில் இறைவன் அருளினர். ராஜாபாய் என்பவள் செல்வந்தன் வீட்டு மக ளாக இருந்தாள். ஆகவே தங்கள் மைந்தனுக்கு அப்பெண்ணை மணம் முடித்துத்தரப் பெண் வீட்டார் ஒத்துக்கொள்ளமாட்டார்கள் என்று குணபாய் கூறினள். இறைவன் கனவில் கூறியிருப்பதால் இந்த விவாகம் நடந்தே தீரும் என்று தாம்சேட்டி கூறினர். அந்தச் செல்வந்தன் வீட்டை அடைந்து அவன் மக ளைத் தங்கள் மகன் நாமதேவருக்கு மணம் முடித்துத் தருமாறு தாம்சேட்டியும் குண பாயும் கேட்டனர். ஏழை ஒருவனுக்குத் தம் மகளை மணம் முடித்துக்கொடுக்கச் செல்வந்தர் தயங்கினர். ஆனல் மாப்பிள்ளையை ஒரு தடவை பார்க்க வேண்டுமென்று செல்வந்தர் விரும்பினர். அவரை அழைத்துக்கொண்டு போய் நாமதேவரை அவருக்குக் காட்ட நாம தேவருடைய அழகும் பொலிவும் செல்வந்தரை மிகவும் கவர்ந்தன. "இவருக்கு நம் பெண்ணைக் கொடுப்பதற்கு நாம் முன் ஜன்மத்தில் தவம் செய்திருக்கவேண்டும். ராஜாபாயும் விரதங் கள் பல இருந்திருக்க வேண்டும். ஆகையால் தான் அவளுக்கு நாமதேவர் மணாளனக வந்து வாய்த்துள்ளார்" என்று எண்ணித் தனவந்தர் மகிழ்ச்சியடைந்தார். நாமதேவருக்கும் ராஜா பாய்க்கும் விவாகம் சிறப்பாக நடந்தேறியது. தாம்சேட்டி மருமகளையும் மகனையும் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். அந்தணர்களுக்கு வேண் டிய பொருள்களைக் கொடுத்து இன்பமடைந் தார். சம்பந்திக்கும் உறவினர்களுக்கும் பெரு விருந்து நடாத்தினர். இகலோக வாழ்க்கை வாழ்வதற்கிடையில் பக்தர்கள் தங்கள் மனதை யாண்டும் பகவானிடம் செலுத்தி வருகிறார் கள். உலக போகத்தில் மனதைக் கொடுத்து விடாது கடவுள் சிந்தனையிலேயே மனதைச் செலுத்திக்கொண்டிருப்பவர்கள்தாம் சிறந்த பக்தர்களாகிறார்கள். நாமதேவர் இல்வாழ்க் கையில் ஈடுபட்டாலும் இறைபக்தியில் மேன் மேலும் வளர்ந்து வந்தார். (தொடரும்)

# நம் இன்றைய சமுதாயப் பிரச்னைகள்

(1900-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 23ம் தேதி சுவாமி விவேகானந்தர் ஸ்ரீமதி மிருணாளினிக்கு எழுதிய கடிதம்)

சொற்களால் விளக்கமுடியாத பேரன்பு சொருபமானவர் இறைவன் என்று நாரதர் இறைவனுடைய பண்பைக் குறிப்பிடுகின்றார்.

स ईशो अनिर्वचनीय प्रेम स्वरूपः

ஸ ஈசோ அநிர்வசனீய ப்ரேம ஸ்வரூப:

என்று நாரத பக்தி சூத்திரம் பகர்கிறது. இதை எல்லாரும் ஒப்புக்கொள்கின்றனர். நானும் அக்கொள்கையில் அசையா நம்பிக்கை கொண்டுள்ளேன். ஜீவர்களின் தொகுப்புக்கு சமஷ்டி என்று பெயர். தனித்தனி ஜீவனுக்கு வியஷ்டி என்று பெயர். நீயும் நானும் வியஷ்டி களாவோம். சமுதாயம் முழுவதும் சமஷ்டி ஆகும். நீ, நான், விலங்கு, பறவை, புழு, பூச்சி, மரம், செடி, நிலம், கோள், விண்மீன் ஆகிய ஒவ்வொன்றும் சமஷ்டியின்கண் உள்ள வியஷ்டிகளாகும். சமஷ்டியாக உள்ளதை வேதாந்தம் விராட்புருஷன் என்றும், ஹிரண்ய கர்பன் என்றும், ஈஸ்வரன் என்றும் அழைக் கின்றது. சமஷ்டிப் பொருளைப் பிரம்மா, விஷ்ணு, தேவி என்ற நாமங்களைக்கொண்டு புராணங்கள் அழைக்கின்றன. வியஷ்டியாக இருக்கும் ஜீவனுக்குத் தனிச்சுதந்திரம் உண்டா இல்லையா என்பது கேள்வி. அப்படிச் சுதந்தி ரம் உண்டானால் அந்தச் சுதந்திரத்துக்கு எல்லை எவ்வளவு? வியஷ்டியாக இருக்கும் பொருள் தன் இச்சையையும், இன்பத்தையும் சமஷ்டியினிடத்தில் ஒப்படைக்கவேண்டுமா? இப்பிரச்சினைகள் ஒவ்வொரு சமுதாயத்துக் கும் நிரந்தரமானவைகள். எல்லாச் சமுதாயங் களும் இப்பிரச்சினைகளுக்கு வழிகாண முயல் கின்றன. மேனாட்டுச் சமுதாயத்தை இப் பிரச்சினைகள் பேரலைகள் போன்று கலக்கிக் கொண்டிருக்கின்றன. தனிப்பட்ட சுதந்திரத் தைச் சமுதாய உயர்வுக்காகத் துறக்கவேண் டும் என்று தூண்டும் கொள்கையே சோஷலி சம் அல்லது சமூக நலன் என்று அழைக்கப் படுகிறது. தனி நலனை நாடுவது சுய நலத்தை ஆதரிப்பதாகிறது.

தனிமனிதன் சமுதாயத்துக்காக வாழவேண் டும். பொது ஸ்தாபனத்துக்குக் கட்டுப்பட்டு ஒழுக்கத்துக்குக் கட்டுப்பட்டு வாழவேண்டு மென்று தனி மனிதனை வற்புறுத்துவதில் நம் தாய்நாடு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கு கிறது. மனிதனுடைய பிறப்பு சாஸ்திர விதிப் படி நிகழ்கிறது என்பது நம் நாட்டுக்கொள்கை. சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு மக்கள் வாழ்வு முழுவதும் உண்பதையும், பருகுவதையும் செய்து வருகிறார்கள். விவாகமும் ஒரு விதிக் குட்பட்டே நிகழ்ந்து வருகிறது. சாஸ்திரங் கள் விதித்த ஆணைப்படியே எல்லாம் நிகழ்ந்து வருகின்றன. சுருங்கக் கூறின் சாஸ்திர விதிப் படியே மக்கள் இறக்கிறார்கள் என்றும் கருதப் பட்டு வருகிறது. இதில் ஒரு பெரு நன்மை உள்ளது. ஆனால் இதில் கேடும் உள்ளது. இதில் உள்ள நன்மை என்ன என்றால் பல தலைமுறைகளாகப் பயின்றுவருகிற செயல்களை எளிமையாகச் செய்து முடித்து விடுகிறார்கள். மூன்று மண்கட்டிகளைக் கொண்டு அடுப்பு அமைத்துச் சில குச்சிகளைக்கொண்டு அற்புத மான உணவையும், கறிவகைகளையும் சமையற் காரன் ஒருவன் சமைத்துவிடுகிறான். இந்த அற்புதமான சமையலுக்கு நிகரான சமயலை வேறு எங்கும் காணமுடியாது. சாதாரணக் கர் நாடகத் தறியைக்கொண்டு ஒரு ரூபாய் மதிப் பில் பொறியியல் நுண்ணறிவு இல்லாதவனும் இருபது ரூபாய் மதிப்புள்ள நூலாடைகளைத் தயார் செய்து விடுகின்றான். இத்தகைய செயல் இந்நாட்டில்தான் நிகழமுடியும். கிழிந்த பாய், விளக்கெண்ணெயைப் பயன்படுத்தி எரிக்கும் மண்விளக்கு ஆகிய எளிய பொருள் களைப் பயன்படுத்திப் படித்த பேரறிஞர்கள் இந்நாட்டில்தான் தோன்றியுள்ளார்கள். அழகு குன்றிய அங்கஹீனமுடைய மனைவியினிடத் துப் பொறுமையுடன் பற்றுவைத்துள்ள கண வனையும், கொடுமைவாய்ந்த உதவாக்கரை யான கணவனுக்கு வாழ்நாள் முழுவதும் அடி மையாக இருந்து வரும் மனைவியையும் நம் நாட் டில்தான் காணலாம். இது நம் நாட்டின் சிறப்பு அம்சமாகும்.

உயிரற்ற இயந்திரங்கள் உந்தப்படுவன போன்று இச்செயல்களில் நம் மக்கள் உந்தப்

படுகிருர்கள். அவர்களிடத்துச் சிந்தனை இல்லை; செயல்திறன் இல்லை; இதய விரிவு இல்லை; உயிர்த்துடிப்பு இல்லை; நம்பிக்கை இல்லை; இச்சைக்கு வலிவு இல்லை; இன்ப அனுபவம் இல்லை; ஆழ்ந்த நுண்ணிய துயரம் இல்லை; புதுமை காணவேண்டுமென்ற ஆவலில்லை; புதுமையைக் கண்டுபிடிக்கும் அறிவில்லை; புதுமையைப் பாராட்டும் மனநிலை இல்லை. இத்தகைய மன இருளில் மூழ்கி இருக்கிருர்கள். அறிவுச் சுடர் அவர்களுடைய இதயத்தை மலரச் செய்யவில்லை. தாங்கள் இருக்கும் நிலையைவிட இன்னும் மேலான நிலை உண்டு என்பது அவர்களின் உள்ளத்தில் ஒருபொழுதும் தோன்றுவதில்லை. அப்படித் தோன்றினுலும் அந்நிலையைப் பிறர் நம்புமாறு செய்யும் ஆற்றல் தங்களுக்கிருக்கிறதென்ற தன்னம்பிக்கை இல்லை. ஒருவேளை அவர்கள் நம்பிக்கையில் உறுதி இருப்பினும் அதற்கேற்ற முயற்சி இருப்பதில்லை. முயற்சி இருந்தாலும் ஊக்கமின்மையால் அம்முயற்சி குன்றிப்போய் விடுகிறது.

சில விதிமுறைகளைக் கடைப்பிடிப்பதன் மூலமாக மேன்மையடைவது உறுதி என்ருல், பல தலைமுறைகளில் வந்துள்ள பழக்க வழக்கங்களைச் சிறிதும் பிசகாது அனுசரிப்பது உயர்ந்த நன்னெறி என்ருல் மரத்தைக்காட்டிலும் நன்னெறியைக் கடைப்பிடிப்பவர் யார்? இதே அடிப்படையில் ஒரு புகை வண்டியைக் காட்டிலும் சூதுவாதில்லாத ஞானி யார் இருக்க முடியும்? கல் ஒன்று இயற்கைச் சட்டத்தை மீறி எப்பொழுதாவது நடந்ததை நாம் பார்த்ததுண்டா? ஆடுமாடுகள் பாபம் செய்வதை யாராவது பார்த்திருக்கிருர்களா? பெரிய நீராவிக் கப்பல் பலமுள்ள புகைவண்டி யந்திரம் ஆகியவற்றிற்கு அறிவில்லை எனினும் அவைகள் நகர்கின்றன; இப்பக்கமும் அப்பக்கமும் திரும்புகின்றன. வேகமாக ஓடுகின்றன. அறிவில்லாமலேயே அவைகள் அத்தகைய செயல்களைச் செய்கின்றன. சிறு புழுவைப் பாருங்கள். அது இரயில் தண்டவாளத்திலிருந்து தன் உயிரைக் காக்கும் பொருட்டு விலகிச் செல்கிறது. ஏன் அப்படி அது விலகுகிறது? அதுதான் அறிவுடன் கூடிய செயல். யந்திரத்திவிடத்து 'இயங்குகின்றேன்' என்ற உணர்வு இல்லை. சட்டத்தை மீறவேண்டும் என்ற நினைப்பு அதற்கு இல்லை. புழு ஒன்று சட்டத்தை மீற விரும்புகிறது. அது முயற்சியில் வெற்றியடைகிறதோ இல்லையோ என்பது வேறு விஷயம். அது சட்டத்தை மீறுவதன் மூலம் தன் அறிவை வெளிப்படுத்துகிறது. ஜீவன் தன் நிலையை உயர்த்திக் கொள்ளுகின்ற அளவு இன்பம் உயர்கிறது. இன்பம் உயர்கிற அளவு 'இருக்கிறேன்' என்ற உணர்வும் நன்கு வெளிப்படுகிறது. சத்திய சங்கல்பமாக இருப்பவர் இறைவன். இறைவனது இச்சை முற்றிலும் நலமே வடிவெடுத்தது. பிரக்ஞை அல்லது பேருணர்வு இறைவனிடத்து முழுமையாக இருப்பதால் அவர் யாவற்றிலும் மேம்பட்டவராக இருக்கிருர்.

கல்வி என்பது என்ன? நூலறிவு கல்வியாகிவிடுமா? பலவிதக் கலைகளைக் கற்பது மட்டும் கல்வியாகிவிடுமா? இவைகளெல்லாம் கல்வி ஆகிவிடமாட்டா. நம்மிடத்துள்ள வாசனை அல்லது இயல்பு நம்மை இயக்கி வருகின்றது. அது நம் மூலம் தன்னை விளக்கிக்கொள்ள முயல்கிறது. அதைத் தன் போக்கில் ஆதிக்கம் செலுத்த அனுமதிக்காது அதைக் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வந்து பயனுடையதாகச் செய்ய நாம் பெறும் பயிற்சி நம்மைக் கல்விமான் ஆக்குகிறது. பண்டைக் காலக் கல்விமுறை நம்முடைய வாசனைக்குத் தடைபோட்டது. நம்மிடத்திலுள்ள வேண்டாத இயல்பின் வேகத்தைத் தணிக்கப் பயன் பட்ட கல்விமுறை இப்பொழுது மறைந்து போய்விட்டது. புதிய கல்விமுறையின் விளைவாகப் பண்டைய கல்வியைப்பற்றிய கருத்துக்கள் மறைந்துகொண்டு வருகின்றன. மனிதனை இயந்திரமாகச் செய்யும் தற்காலக் கல்விமுறை கல்வி ஆகுமா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். இயந்திரம் போன்றிருக்கும் மனிதனை விடச் சுயமாகச் சிந்தனை செய்பவன் மேலானவன் என்பது என்னுடைய அபிப்பிராயம். இயந்திரம் போன்றிருந்து நல்லவனுக இருப்பதைவிடச் சுயமாகச் சிந்தித்துத் தன் இயல்பினுல் உந்தப்பட்டுத் தீங்கு செய்பவனுக இருந்தாலும் அவன் மேலானவனே ஆவான். சுயமாகச் சிந்தித்துச் செயல்படுபவன் திருந்துவதற்கு வாய்ப்பு உண்டு. (தொடரும்)

# சனாதன தர்மத்தின் சிறப்புகள்

( திரு. V. S. நரசிம்மன் )

**புராணக் கதையின் உட்பொருள்**

நன்கு பிரசித்தமாகியுள்ள இந்தப் புராணக் கதையை நமது உலக வாழ்விற்குப் பொருத்திப் பல உண்மைகளை உணர்த்தலாம். சமுதாயத்தில் என்றும் நல்லவர்களும், தீயவர்களும் இருப்பர். தம்மிடையே போராடிக் கொண்டிருந்தாலும், வாழ்க்கையை மேம்படுத்தும் செயலில் இருவரும் ஒத்துழைப்பார்கள். நல்ல வியாபாரி, 'தீயவனுக்கு என் சரக்கை விற்க மாட்டேன்' என்று வீம்பு பிடிப்பதில்லை. 'வியாபாரம் வேறு, எங்கள் வாழ்க்கை நெறி வேறு' என்றே கூறுவான்.

'பாற்கடல்' போன்றது உணவுப் பொருள்களைத் தன்னகத்தே சேமித்து வைத்திருக்கும் வளமான இந்தப் பூவுலகம். இயற்கைச் செல்வங்களை முயன்று தேடி, வெளிக் கொணர்ந்து அனுபவிப்பதே 'பாற்கடலைக் கடையும் செயல்.' ஆங்கே செல்வம் (ஸ்ரீ; லக்ஷ்மி தேவி) ஆழ்ந்த கல்வி ஞானம் (வித்யா, சரஸ்வதி), விலை மதிப்பற்ற ஆபரணங்கள் (கௌஸ்துபம்) வாகன வசதி (ஐராவதம், உச்சைஸ்ரவஸ்) ஆகியவை நிறைந்துள்ளன. கல்ப தருவை ஒருவன் செய்த புண்ணியங்களுக்கு நிகராகச் சொல்லலாம். வங்கிக் கணக்கில் இருப்பு வைத்துக் கொண்டு ஒரு காசோலையைக் கொடுத்தால் அவன் விரும்பிய தொகையைப் பெறலாம். அது போன்றே புண்ணியங்களைச் சம்பாதித்தவன் பல நன்மைகளை அடைகிறான். வற்றாத நலன்களைத் தரும் காமதேனு, அவன் நிர்வகிக்கும் பெரிய பண்ணைகள், மற்றும் தொழிற்சாலைகளின் உருவகம் ஆகும். இப்படிப் பாற்கடலில் தோன்றிய அனைத்துப் பொருள்களுக்கும் இணையாக உலக வாழ்வில் ஒன்றைப் பொருத்திக் காட்டலாம்.

**'மரணம்' என்னும் ஆலகாலம்**

இங்ஙனம் வாழ்க்கையை வளமாக்கப் பல பொருள்களை அடையும் வாய்ப்பு உள்ளது. அதனிடையே எவரும் எதிர்பாராத வண்ணம் 'மரணம்' என்னும் நஞ்சு தோன்றி அனைவரையும் அச்சுறுத்துகிறது. நல்லவர், தீயவர் எவரானாலும் இதற்கு விதிவிலக்கு அல்லர். எந்த லோகத்திற்கு ஓடினாலும், அதன் பிடியில் அவன் சிக்குண்டு தவிக்கவேண்டும். புராணத்தில் குறிப்பிடப்பட்டது போன்று, விமானத்தில் பறந்து எவரெஸ்ட், கைலாசம் போன்ற மேல் உலகங்களுக்குப் போகலாம்; அல்லது நீர் மூழ்கிக் கப்பலில் (Submarine) அமர்ந்து பாதாள உலகமும் செல்லலாம்; எங்குச் சென்றாலும் அதனின்று தப்ப இயலாது.

**ம்ருத்யோர் மா அம்ருதம் கமய**

''மரணத்தினின்று மரணமிலாப் பெருவாழ்வுக்கு அழைத்துச் செல்வாயாக"—இது வேத காலப் பிரார்த்தனை.

தேவர்களும், அசுரர்களும் சிவபெருமானைச் சரண் அடைந்தனர்.

**'ஓம் த்ரயம்பகம் யஜாமஹே, சுகந்திம் புஷ்டி-**
**வர்த்தனம்**
**உர்வாருகமிவ பந்தனாத் ம்ருத்யோ: முக்ஷீயமா**
**ம்ருதாத்'**

என்று வேண்டினர். ''மரண பயம் மிக்க உள அம்மக்கள் மரண பயம் ஒன்றில்லா மகேசன் தன் சரணமே சார்வர்" என்று ஸ்ரீ ரமணர் 'உள்ளது நாற்பது' என்ற நூலில் குறிப்பிடுகின்றார்.

அழிவற்ற அமரத் தன்மையை உலகப் பொருள்களால் அடைய முடியாது. 'ஆத்ம வித்யா' ஒன்றே அதற்கு அடிகோலும். 'மரணமற்ற பெருவாழ்வு' நமது தனிப் பெரும் உரிமை; நாம் அதற்குச் சொந்தக்காரர்கள்! எனவே 'ம்ருத்யோர் மா அம்ருதம் கமய— ''மரணத்தினின்று விடுவித்து அழிவற்ற அமரத் தன்மைக்கு எடுத்துச் செல்லுங்கள்" என்று பிரார்த்தனை செய்கின்றோம். இத்தகைய உயர்ந்த நிலையை அடைவதுதான் மானுட வாழ்வின் லட்சியம் ஆகின்றது. எனவே மகேஸ்வரனைச் சரண் புகுந்து, ஆத்ம ஞானத்தில் நிலைத்து இருக்கவேண்டும். 'பாற்கடலைக் கடைவது' என்ற புராணக் கதையின் உட்பொருள் இது. மிகவும் எளிதான கதை வடிவில் உயர்ந்த தத்துவத்தை வழங்குவது புராணத்தின் சிறப்பு ஆகின்றது. எனவே புராணம் சமயத்தின் இன்றியமையாத பகுதியாகும்.

**பகுதி 4. சடங்குகள் - வழிபாடு**

கிரியை அல்லது சடங்கு கொள்கையாகவுள்ள தத்துவத்திற்குப் புறவடிவம் தருவதாகும். ( The abstract is given a concrete shape ). ஆலயவழிபாடு ஒரு சடங்கு ஆகும். சாதாரண மக்களும் புரிந்துகொள்ளும் முறையில் உயர்ந்த தத்துவங்களைத் தன்னுள் அடக்கியுள்ளது ஆலயம். பிரபஞ்சம் முழுவதும் பரமனின் கோவில்; நமது 'ஊனுடம்பு ஆலயம்'(தேஹம் தேவாலய:) எனவே ஆலயம் பிரபஞ்சத்தையும் (macrocosm, பிரம்மாண்டம்) சரீரத்தையும் (microcosm, பிண்ட அண்டம்) குறிக்கும் புறச் சின்னங்கள் (symbols) ஆகும்.

**ஆலய அமைப்பு, கோபுரவாசல்**

நமது மனம் போன போக்கில் ஆலயத்தை அமைக்கக் கூடாது. சாஸ்திர விதிகளுக்கு ஏற்ப இது அமைய வேண்டும். ராஜகோபுரம் உடலைக் குறிக்கும் புறச்சின்னம். ஒன்றுமுதல் பதின்மூன்றுவரை ஒற்றைப்படை வரிசையில் கோபுரத்தின் வாயில்கள் அமைக்கப்படுகின்றன. இவை நமது சரீரத்தில் உள்ள இந்திரிய வாயில்களைக் குறிக்கும். நவத்வாரே புரே தேஹி—ஒன்பது வாயில்கள் உள்ள கோட்டையைத் தேகமாகக் கொண்டவன் என்று கீதை உரைக்கின்றது. இந்த வாசல்களின் மூலமே வெளி உலகம், உள் உலகம் இரண்டும் நமது தொடர்பிற்கு வருகின்றன. வாசல்கள் பல எனினும், முக்கியமானது கோபுர வாசல் ஒன்றுதான். அகத்தே உள்ள மெய்ப் பொருளை உணர 'மனம்' என்ற பிரதான கோபுர வாசலைப் பயன்படுத்தவேண்டும். மனம் இரண்டுவித செயல்களை ஆற்றும். வெளி உலகை அறிவது (பஹிர் முகம்); அகத்தே ஆழ்ந்து (அந்தர் முகம், உள் முகம்) மெய்ப்பொருளை உணர்வது. வெளியே செல்லும் இயல்பைக் கட்டுப்படுத்தி, உள்நோக்கித் திருப்புவது ஆத்ம சாதனம். பிரவிருத்தி இயல்பினின்று நிவிருத்தி இயல்பைக் கைக்கொள்வது இதுவே.

**பலி பீடம்**

கோவிலில் நுழைந்த பின் பலிபீடத்தின்முன் விழுந்து கும்பிடுகின்றோம். நமது கீழான இயல்பை, அசுரத்தன்மையை, விலங்குத் தன்மையைப் பலிகொடுத்துப் பரிணமத்தில் மேலோங்கிச் செல்வதை இது குறிக்கும். ஆண்கள் 'அஷ்டாங்க' நமஸ்காரமும் (எட்டு உறுப்புக்களால் வணக்கம்) பெண்கள் 'பஞ்ச அங்க' நமஸ்காரமும் செய்து, அதன்பின் கோயிலை வலம் வருகின்றனர். இத்தகைய பிரதக்ஷிணம் (திருச்சுற்று) பிராணயாமத்தைக் (சுவாச ஒழுக்கத்தை) குறிக்கும். சாத்விக சாதனை முறையில் வலம் வருதல் நடைமுறை; தந்திர சாதனத்தில் இடம் வருதல் நடைமுறை. முறையே தக்ஷிண ஆசாரம், வாம ஆசாரம் என்று இவை வழங்கப்படுகின்றன.

**வாகனம்**

ஒவ்வொரு ஆலயத்திலும் குடிகொண்டுள்ள தெய்வத்திற்கு உரித்தான வாகனங்களைக் காணலாம். வேதாந்த தத்துவத்தின்படி எல்லா உயிரினங்களிலும் தெய்வீகம் குடிகொண்டுள்ளது; இது மனிதனுக்கு மட்டும் அமையும் சிறப்பு அன்று. பறவைகள், விலங்குகள் முதலிய அனைத்து ஜீவராசிகளும் வாகனமாக அமைகின்றன. இதில் ஏற்றத் தாழ்வு இல்லை. சாதாரணமாகக் கருதப்படும் மூஞ்சுறு என்ற எலியை வாகனமாக உடையவர் விநாயகர். பருத்த யானையின் சரீரத்தைச் சிறிய எலி தாங்குகின்றது. சரீரத்தின் ஸ்தூல வடிவைக் கண்டால் இது பொருத்தமற்றது. ஓர் உதாரணத்தை எடுத்துக்கொண்டால் நூறு ஆயிரம் பேரை அழிக்கவல்ல அணுகுண்டை ஒரு சிறுவனும் கையால் தூக்கலாம். அது போன்று வாகன தத்துவம் புறவடிவைத் தள்ளி, நுட்பமான (சூக்ஷ்ம) ஆன்ம வடிவை ஞாபகப்படுத்த வேண்டும். ஆலயத்தில் உள்ள மூர்த்திக்கு எதிரே வாகனம் அமையும். நாம் வழிபடும் போது இரண்டிற்கும் இடையே இருக்கக் கூடாது. குறுக்கே போவதும் தவறு. நந்தியை மறைத்துக்கொண்டு சிவதரிசனம் செய்யக் கூடாது. மற்றவர்கள் வழிபாட்டிற்குத் தொந்தரவு செய்யாது இருப்பது பண்பின் அறிகுறி.

நந்தி மூலஸ்தானத்திலுள்ள மூர்த்தியைப் பார்த்த வண்ணம் அமைக்கப்பட்டிருக்கும். வழிபாடு செய்கிறவர்கள் மனம் வழிபாடு முடியும் வரையில் இறைவனைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதை அது குறிக்கிறது. இங்ஙனம் ஆலய அமைப்புத் தத்துவத்துக்கு விளக்கமாக அமைந்துள்ளது.

---

# கற்பரசி சகுந்தலை

(சுவாமி துருவானந்தர்)

"மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திடல் வேண்டுமம்மா" என்றார் கவிஞர் தேசிகவிநாயகம்பிள்ளை. இது பெண் குலத்தை வெறும் புகழ்ச்சி செய்வதற்காக எழுந்த கொள்கையன்று. பெண்ணினம்தான் குழந்தைகளைத் தோற்றுவித்துப் பராமரித்துப் பாது காத்து வருகிறது. ஆகவேதான் பெண் இனத்தை மதித்துப் போற்றி வரவேண்டும் எனச் சான்றோர்கள் கூறுகின்றனர். ஆனால் நிலைமை வேறுவிதமாக இருக்கிறது. பெண் பிறவி தாழ்ந்த பிறவி என்ற அபிப்ராயம் சிலரிடமிருக்கிறது. குழந்தை ஒன்று பிறக்கிறது. பிறந்த குழந்தை ஆணாக இருந்தால் பெற்ற தாய்முதல், உறவினர் வரை அனைவரும் மகிழ்கின்றனர். பெண் குழந்தை பிறந்துவிட்டால் மகிழ்ச்சியிருந்தாலும் வாரிசுக்கு ஆண் குழந்தையில்லையே என்கிற வாட்டம் இல்லாதார் வெகுசிலரே. ஆண் குழந்தையிருந்தால் தன் ஆஸ்திக்கு வாரிசு என்றும், வயதான காலத்தில் தங்களை அவன் காப்பாற்றுவான் என்றும், பெண்ணாக இருப்பவள் என்றேனும் ஒருநாள் வீட்டைவிட்டுப் போகிறவள் தானே என்கிற எண்ணமும் பொதுவாக பெற்றோர்களுக்கு வருவது உண்டு. தங்களைக் காப்பாற்றுவான் என்று எந்த மகனை நம்பிப் பெற்றோர்கள் வாழுகிறார்களோ, அந்தப் பெற்றோர்களைத் தவிக்கவிட்டுத் தனியாக வாழ்ந்து கொண்டிருப்பவர்களையும் காணலாம். ஆனால் பிறந்த இடத்தைவிட்டு முற்றிலும் புதிய புகுந்த இடம் சென்று அங்குள்ள மற்றவர்களுக்குத் தன் தொண்டின் மூலம் இனிய செயல்களைப் பரபரப்பின்றிச் செய்து எல்லாருக்கும் தியாகத் தாயாக வாழ்ந்து பிறந்தகத்திற்கும் புக்ககத்திற்கும் பெருமை தேடித்தரும் பெண் தானும் பெருவாழ்வு வாழ்ந்து சமுதாயத்தையும் உய்விப்பவள் ஆவாள்.

இன்று நாட்டில் நல்லவர்கள் அதிகமாக இல்லாததால் நல்ல திட்டங்கள் உருவாகாமல் இருக்கின்றன. நல்ல குடும்பத்திலிருந்துதான் நல்லவர்கள் உருவாகிறார்கள். நல்ல குடும்பத்தை உருவாக்குபவள் அன்னையே. மரத்தின் வேர்கள் புறவுலகுக்குத் தெரியாது பூமிக்கடியில் மறைந்து கிடக்கின்றன. மரத்தின் உறுதி வேரைப் பொறுத்திருக்கிறது. அதே போன்று குடும்பத்தின் உயிர் நாடி தாய். அவள் கற்புக் கரசியாக, கருணை உள்ளம் கொண்டவளாக, கனமும் சோர்வுறாது பிறர் நலனையே கருத்தில்கொண்டு இல்லத்தைப் பேணுவதால் அவள் இல்லாள் எனப்படுகிறாள். கற்பரசிகளின் தூய வாழ்க்கையால் தான் உலகம் இன்னும் கெடாது இருக்கிறது. "தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை" என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கற்பரசிகளின் ஆற்றலைப் படம்பிடித்துக் காட்டியுள்ளார் வள்ளுவர். கற்பரசிகள் தங்களின் தூய வாழ்க்கையால் இந்த உலகத்தை விரும்பிய பிரகாரம் ஆட்டிவைக்க முடியும். இது வெறும் பேச்சன்று; நிகழ்ந்தது; நிகழக்கூடியது. தன் கணவன் காணாத உலகம் தனக்கு வேண்டாம் என்று தன் கண்களைக் கட்டிக்கொண்டு திருதராஷ்டிரன் போன்றே பார்வையற்று வாழ்நாளெல்லாம் கற்பரசியாக வாழ்ந்த காந்தாரி; எவ்வளவு துன்பம் வந்தபொழுதும் தன் நாயகன் ராமனைத் தவிர வேறு யாரையுமே அறியாத சீதை; கட்டிய கணவன் நிலை தடுமாறிச் செல்லாத இடம் சென்றாலும் கொண்ட கணவனை மறவாது அவனுக்காகவே வாழ்ந்த கண்ணகி; விதிவசத்தால் இளம் வயதிலே கொண்ட கணவனின் உயிர் பிரிந்தாலும் தன் கற்பின்பலத்தால் யமனுடன் போராடித் தன் கணவனுடைய உயிரை மீட்ட சாவித்திரி; இவ்வாறு எத்தனையோ கற்பரசிகள் நம் நாட்டில் பிறந்து வருங்காலப் பெண்டிர்களுக்குச் சிறந்த முன்மாதிரியாக வாழ்ந்து வந்துள்ளனர். இன்றைய நாகரிக மோக வாழ்வில் எப்படி வாழவேண்டும் எனத் தெரியாது, 'கண்டதே காட்சி; கொண்டதே கோலம்' என மயங்கித் தத்தளிக்கும் பெண்ணினம் பெருமையடையவும் சிறந்த புத்திரர்களையும், புதல்விகளையும் நாட்டிற்கு வழங்கவும் ஒரே வழி, கற்பரசிகள்

வாழ்ந்த முறையைத் தெரிந்து அதன்படி வாழ்தலே ஆகும். ஆகவே, ஆசிரியைகள், சிறுமிகள், மங்கையர், வயது முதிர்ந்தோர் அனைவரும் இந்தக் கற்பரசிகளின் வாழ்க்கை வரலாற்றை மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்வது அவர்களின் தலையாய கடமை யாகும்.

கற்பரசிகளின் வாழ்க்கையைப் பற்றிக் கற்பரசிகளே எடுத்துச் சொல்வதும் பொருத் தந்தானே? ஆகவே கற்பரசி சகுந்தலை தன் சரிதத்தைக் கூறுகிருள் கேளுங் கள்:

"குழந்தை ஒன்று 'வீல்' என்று கத்தி அழும் குரல் கேட்டது. நடுக்காட்டில் பயங் கரமான மிருகங்கள் உலவும் அடவியில் குழந்தை அழும் குரலைக் கேட்டால் யாருக் குத்தான் மனம் உருகாது. அனாதையாக அழுது துடித்துக்கொண்டிருந்த அந்தக்குழந் தையினருகே சாகுந்திப் பறவைகள் சுற்றிச் சுற்றி வந்த வண்ணமிருந்தன. குழந்தையின் அழுகுரலும், பறவைகளின் படபடப்பும் சேர்ந்து, அதற்குச் சமீபத்தில் இருந்த ஆஸ்ர மத்தில் எதிரொலித்தன. மோன நிஷ்டையில் மூழ்கியிருந்த முனிவர் ஒருவரின் செவிகளில் இந்த ஓசைகள் சென்று தாக்கின. தியானநிலை கலைந்த முனிவர் கண்வர் கண்திறந்தார். ஆஸ்ர மத்தைவிட்டு வெளியே வந்து பார்த்தார். பறவைகளால் சூழப்பட்ட நிலையில் பச்சிளம் குழந்தையொன்று பரிதாபமாக அழுதுகொண் டிருந்தது. அதைக் கண்ட கண்வ மகரிஷியின் மனம் துடித்தது. அக் குழந்தையினருகே சென்ருர். அழகிய அக்குழந்தையை அள்ளி யெடுத்து அன்போடு உச்சி மோந்தார். இக் குழந்தை யார்? இந்தப் பயங்கரமான காட்டில் தன் ஆஸ்ரமத்தினருகில் குழந்தையை விட்டுப் போனவர் யார்? இக்குழந்தையைப் பெற் றெடுத்த பெற்ருேர் யாவர்? என்பதை அறிய ஞானதிருஷ்டியால் நோக்கினர். தெளிவான உள்ளத்தில் குழந்தையைப் பற்றிய செய்திக ளெல்லாம் படலம் படலமாகக் காட்சியளித் தன. சாகுந்திப் பறவைகளால் சூழப்பெற்றி ருந்தமையால் அக்குழந்தைக்கு சகுந்தலை என்று பெயரிட்டு மகரிஷி வளர்த்து வந்தார். அந்தக் குழந்தைதான் இன்று சகுந்தலையாக வளர்ந்து உங்கள் முன் பேசுகிறேன்.

என் வாழ்வில் பின்னேக்கிப் பார்த்தால் நான் கடந்து வந்துள்ள பாதைகள் எவ்வளவு கரடு முரடானவை என்பது தெரியும். ஆனந்த மாக அரசியாக வாழவேண்டிய நான் அனதை யாக ஆரண்யத்திலே வளர்ந்தேன். 'கண்வ மகரிஷிதான் தந்தையாக இருந்து வளர்த் தாரே, அப்படியிருக்க உன்னை அனதை என்று நீ எப்படிச் சொல்லலாம்' என்று நீங்கள் எண்ணுவீர்கள். கண்வமகரிஷி என்னை வளர்த்தாரே தவிர, பெற்ற தந்தை அவரல்லர். பெற்ற தாய் தந்தையரை நான் பார்த்தது மில்லை. ஆனல் ஒருநாள் கண்வ மகரிஷியிடம் சில முனிவர்கள் என்னைச் சுட்டிக்காட்டி "இந்தப் பெண் யார்? அனைத்தையும் துறந்து வந்து துறவியாய்த் தவம் பயிலும் உமது ஆஸ் ரமத்திற்கு இந்தக் கன்னிப்பெண் எப்படி வந்தாள்? விவரங்களைக் கூறுங்கள்" என்றனர். தவயோகியும் முனிசிரேஷ்டருமாகிய கண்வர், அவர்களைத் தனியே அழைத்துச் சென்று என்னைப்பற்றிய முழு உண்மையையும் அந்தத் தவசிகளிடம் எடுத்துரைத்துக் கொண்டிருந் தார். மலர் பறிக்கப் போனபோது அவர்கள் பேசிய பேச்சு என் காதில் விழுந்தது. சற்று நின்று அனைத்தையும் கேட்ட பிறகு எனக் குத் தலையே சுழன்றது. நான் பூமியில் நிற்கிறேனு அல்லது கீழே விழுந்துவிட் டேனு என்று எனக்குத் தெரியாது. ஆனல் என்னை ஈன்றெடுத்தவள் தேவலோக மடந்தை மேனகை என்றும், க்ஷத்திரிய அரசனயிருந்து பின் தவசிரேஷ்டராக மாறிய விசுவாமித்திர ரின் தவத்தை அவள் தேவேந்திரன் ஆணைப் படி பாழ்படுத்தினுள் என்றும் கேட்டபோது என் உடல் நடுங்கியது. என் தாய் மேனகை தன் அரிய அழகுக் கவர்ச்சியால் விசுவா மித்திரரை ஈர்த்து அவளுடைய கணவ ராக ஆக்கிக் கொண்டாள். அதன் பிறகு ஓராண்டு இல்லற வாழ்க்கையிலே பிறந்த வள்தான் நான். தவம் பண்ணப்போய் நெறி தவறி மேனகை வீசிய வலையில் வீழ்ந்தவர் என் தந்தை விசுவாமித்திரர். பின் தவறை உணர்ந்து விவேகம் வரப்பெற்றவராய் என் தாயிடமிருந்து விலகி வெளியேறினர். 'மனைவி தான் பிடிக்கவில்லையென்ருல் பெற்ற மகளையா

வது எடுத்துக்கொள்ளுங்கள்' என்று என் தாய் என் தந்தையை வேண்டினுள். வைராக்ய புருஷராயிருந்த என் தந்தை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். தேவலோகக் கன்னியான என் தாய், தான் வந்த காரியம் நிறைவேறிய திருப்தியில் என்னைக் கண்வமகரிஷியின் ஆச்ர மத்தருகே வைத்துவிட்டுத் தேவலோகம் சென்றுவிட்டாள். இவ்வாறு ஞானக்காட்சி யில் கண்டதைக் கண்வமகரிஷி அருகிலிருந்த முனிவர்களிடம் மிக மெல்லிய குரலில் சொல் லிக்கொண்டிருந்தார். இதைக் கேட்ட நான் மூர்ச்சையடைந்து கீழே விழுந்துவிட்டேன்.

அதற்குப்பிறகு நான் விழித்துப் பார்த்த போது ஆச்ரமத்திலேயே தோழியர்களுக்கு மத்தியில் இருந்தேன். பிறந்தது முதல் கன்னி யாக வளரும்வரை எப்போதும் பறவை, மான், முயல் இவைகளோடுதான் நான் விளை யாடி மகிழ்ந்து வந்தேன். வாய் உள்ள ஜீவர் களைவிட வாயில்லாத ஜீவன்களிடம் பழகு கிறபோதுதான் நான் உண்மையிலேயே மகிழ் வையும் ஆனந்தத்தையும் பெற்றேன். ஏனெ னில் அவைகளிடத்தில் அகங்காரம் மமகாரம் கிடையாதல்லவா? ஆனல் எத்தனை ஆண்டு களுக்கு நான் இங்ஙனம் விலங்குகளோடு விளை யாடி வீண்காலம் போக்குவது? என் எதிர் காலத்தை எண்ணவே பயமாயிருந்தது. ஆகவே, என் மன நிலையைக் குறிப்பால் அறிந்த என் வளர்ப்புத் தந்தை என் துணைக் குத் தோழிகள் சிலரை நியமித்தார். எப்போ தும் அவர்கள் என் அருகிலேயே இருந்து ஏதாவது பேசித் தனிமையை மறக்கச் செய் தார்கள்.

ஒருநாள் அஸ்தினுபுரத்து மன்னர் துஷ்யந் தன் காட்டிற்கு வந்தார். வேட்டையாடுவதில் பிரியமுள்ள அவர் கண்ணில் ஒரு மான்குட்டி தென்பட்டது. அந்த மானை உயிருடன் பிடித்து விட விரும்பினர். ஆகவே அதைத் துரத்திக் கொண்டே ஓடினர். ஆச்ரமவாசிகள் இக்காட் சியைக் கண்டு 'ஆச்ரமத்திலுள்ள மானை வேட்டையாடாதீர்கள்' என்று கூச்சலிட்டனர். உடனே அரசர் கண்வரின் ஆஸ்ரமத்துக்கு அருகில் தாம் வந்திருப்பதை அறிந்து, கண்வ மகரிஷியைத் தரிசித்து ஆசிபெற்று வரலாம் என்று மானைத் துரத்துவதை விட்டு அரச உடையைக் களைந்து ஆடம்பரமின்றி ஆஸ்ர மத்திற்குப் போய்க் கொண்டிருந்தார். அப் போது நீர் எடுத்துக்கொண்டு தோழிகளோடு ஆச்ரமம் வந்துகொண்டிருந்த நான் திடீ ரென்று அவரைக் காண நேரிட்டது. முன் பின் இதுவரை எந்த ஆடவரோடும் பேசியறி யாத எனக்கு அவரைக் கண்டதும் நாணத் தால் நா எழவில்லை. எனது தோழிகள் மாத் திரம் அவரை இன்முகத்தோடு வரவேற்று ஆஸ்ரமத்திற்கு அழைத்துச் சென்ருர்கள். கண்வமகரிஷி ஆஸ்ரமத்தில் இல்லாதபோது வந்த அதிதியைக் குறைவில்லாது உபசரித்து அருந்துவதற்குத் தேனும் கனியும் தந்தனர். அப்பொழுது அந்த அஸ்தினுபுரத்து வேந்தர் தம் மனநிலையைக் குறிப்பால் உணர்த்தினர். மகரிஷியின் போதனையால் உலக ஆசையை மறந்து விரதவாழ்க்கை வாழ்ந்து வந்தேன் நான். ஆனல் அந்த நேரத்தில் ஏதோ ஓர் இனம்தெரியாத ஜன்மாந்தர வாசனையால் என் மனம் அவரை நாடியது. ஆயினும் "ஹிந்துப் பெண் ஒருத்தி தன்னைப் பெற்று வளர்த்த பெற் ரேர்கள் சம்மதமின்றித் தன் எதிர்காலக் கண வனைத் தேர்ந்தெடுப்பது கூடாது.எந்தப்பெண் ணெருத்தி தன் கணவனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பைத் தன் தாய், தந்தையரிடத்திலே ஒப்படைத்துவிட்டு, தன்னைக் கற்புள்ள கன்னி யாக மனம் வாக்கு காயத்தால் மாசுபடியா மலும், அகங்காரம், பகட்டு, பொருமை, ஆகி யவை இல்லாமலும், தனக்கு என்று அமைந்த வீட்டு வேலைகளை ஒத்திப் போடாது சுறுசுறுப் போடும், இன்முகத்தோடும் செய்கின்ருளோ அவள் புகுந்த வீட்டில் இலட்சுமி கடாட்சத் தைத் தோற்றுவிப்பாள். ஆகவே மகரிஷியின் விருப்பப்படிதான் "நான் நடந்து கொள்வேன்" என்று அவரிடம் கூறினேன். ஆனல் "விசுவா மித்திரர் ரிஷி ஆவதற்கு முன் அரசனுக இருந் தவர். நீ அவருடைய மகளாக இருப்பதால் நீ அரச வமிசத்தில் பிறந்த துஷ்யந்தனை மணப் பதில் தவறில்லை. காந்தருவமுறைப்படி உன்னை மணந்து கண்வ மகரிஷியின் ஆசிகளோடு என் நாட்டிற்கும் அழைத்துச் செல்கிறேன்" என்று அவர் சொன்னவுடன் நானும் சம்மதித்தேன். கந்தருவ மணம் நடந்தது.

அப்போது சில முனிவர்கள் பரபரப்போடு

வந்து அரசரிடம் முறையிட்டார்கள். தாங்கள் புரியும் யாகத்தை அரக்கர்கள் கெடுப்பதாக வும், தாங்கள் நிம்மதியாக ஜபதபங்களை ஆற்ற முடியாமல் அல்லற்படுவதாகவும் அரசரிடம் சொல்லித் தங்களுக்கு ஏற்பட்ட அவல நிலை யைப் போக்க வேண்டுமென்று வேண்டினர். தபோதனர்கள் தவித்து வாடுவதைக் கண்ட துஷ்யந்த மன்னர் வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு உடனே அரக்கர்களை ஒழிக்கப் புறப்பட்டார். அவ்விதம் சில நாட் கள் வனத்திலிருந்த அரக்கர்களை ஒழிக்கும் பணியை செவ்வனே ஆற்றிக்கொண்டிருக்கும் போது அரண்மனைச் சேவகன் வந்து அரண் மனையில் மிகவும் முக்கியமான அலுவல் இருப்பதாகவும் மன்னர் உடனே புறப்பட வேண்டுமென்றும் கூற அரசரும் புறப்பட ஆயத்தமானுர். அப்போது அவருடைய பிரிவை எண்ணி என் மனம் துடித்தது. என் மனநிலையை அறிந்த அவர் தான் அரண்மனை சென்றதும் அமைச்சரை அனுப்பி வைப்பதாக வும் அவரோடு தன் நாட்டிற்கு வந்தவுடன் உரிய முறையில் மணவிழாவை வெகு விமரிசை யாக நடத்தலாம் என்றும் கூறி என்னைச் சமாதானப் படுத்தினுர். அரண்மனைக்கு வரும் பொழுது இன்னுர் என்பதைக் காட்டுவதற் காக அவருடைய ஞாபகார்த்தமாகத் தன் முத் திரை மோதிரத்தை என் கைவிரலில் அணி வித்துச் சென்றுர். அரசர் அணிவித்த மோதி ரத்தைப் பார்த்துக்கொண்டு அவரையே நினைத்துக்கொண்டு இவ்வுலகத்தை மறந் திருந்த என்னிடம் விதி விளையாட ஆரம் பித்தது.

ஒருநாள் மிகவும் முன்கோபம் உடைய தவ யோகியான துர்வாச மகரிஷி எங்கள் ஆஸ்ர மத்துக்கு வந்தாராம். தம் நண்பரான கண்வ மகரிஷியைப் பெயர் சொல்லி அழைத்தாராம். அப்போது ஆஸ்ரமத்திலே என்னைத் தவிர யாருமில்லை. நானும் புறவுலக உணர்வற்று வாசலில் அமர்ந்து இருந்ததைப் பார்த்த முனி வர் தன் நெடு நோக்கால் என் மனநிலையை உணர்ந்தார். கண்வமுனிவரின் ஆஸ்ரமம் தேடி வந்தும் அவருடைய மகள் சகுந்தலை அங்கே இருந்தும் தன்னை மதித்து வரவேற் காது பராமுகமாய் அலட்சியமாய் இருந்த தைப் பார்த்த முனிவருக்குச் சினத்தால் முகம் சிவந்ததாம். "நீ யாரைப்பற்றிய எண்ணத்தில் மனதைப் பறிகொடுத்து விருந்தினனுக வந்த என்னை அவமதித்தாயோ அந்த உன் நாய கன் உன்னை மறந்து விடுவானுக" என்று சபித்து விட்டுக் கோபத்தோடு வெளியேறினு ராம். அப்போது அங்கு வந்த தோழிமார்கள் நடந்ததை ஊகித்து அவர் காலில் வீழ்ந்து "அறியாது செய்த தவறுக்குச் சகுந்தலைக்கு இவ்வளவு பெரிய சாபம் வேண்டாம். மன் னித்தருளுங்கள்" என்று வேண்டினராம். இறுதியில் அவர் ஒரு நிபந்தனை விதித்தார். அந்த அரசன் கொடுத்த பொருள் ஏதாவது இருந்தால் அவன் என்னை அடையாளம் கண்டுகொள்ளமுடியும் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். அவர் போனபின் இந்தச் செய்திகளைக் கேட்ட எனக்குத் தலையே சுழன் றது. எனக்கு ஏன் இந்தப் பெண் பிறவி வாய்க்கவேண்டுமென்று என் வினைப்பயனை நொந்து அழுதேன். அழுது ஓய்வதற்கு முன் யாத்திரை போயிருந்த என் வளர்ப்புத்தந்தை ஆஸ்ரமத்திற்குத் திரும்பினுர். வழக்கத்திற்கு மாருக என் முகத்தில் உண்டான மாறுபாட் டைக் கண்ட முனிவர் நடந்தவைகள் அனைத் தையும் தம் ஞான திருஷ்டியின் மூலம் கண்ட றிந்து கொண்டார். புன்முறுவல் பூத்து என்னை அன்போடு அழைத்து "நீ செய்யத் தக்க காரியத்தையே செய்துள்ளாய். க்ஷத்திரி யப் பெண்ணுகிய நீ அரசனெருவனை அதி லும் தர்மவானுகிய துஷ்யந்தனை மணம் புரிந் தது மிகப் பொருத்தமே. உங்களுக்குப் பிறக் கப் போகும் பிள்ளையினுல் இந்த நாடே பெருமையுறப் போகிறது. உன்னை நாளையே உன் கணவனுகிய அரசரிடம் அனுப்பி வைக் கிறேன்" என்று சொல்லி என் உள்ளம் ஆனந் தத்தால் நிறையும்படிச்செய்தார். மகிழ்ச்சியில் மீண்டும் திளைக்கவே துர்வாசர் இட்ட சாபம் எனக்கு மறந்து போயிற்று. வாழ்வு இன்ப மும், துன்பமும் கலந்தது. இன்பத்தை விரும்பு வதும் துன்பத்தை வெறுப்பதும் உயிர்களின் இயல்பு. இன்பதுன்பங்களில் பலஜன்மங் களில் உழன்றபிறகுதான் விவேகம் வருகிறது. விவேகம் வருய்வரையில் இன்பதுன்பத்தில் உழன்ருகவேண்டும். (தொடரும்)

# மகிஷாசுரமர்த்தனி

( சிறு தொடர் கதை )

( சிவத்தொண்டன் )

[ 391ஆம் பக்கத் தொடர்ச்சி ]

''அவ்விதமே நீயும் மற்றவர்களின் நலனுக்காகப் பிரார்த்திக்க வேண்டும். நம் தோட்டக்காரன் முனியனின் மகளைப் பார். இரண்டு கால்களையும் இளம்பிள்ளை வாதத்தில் இழந்து விட்டாள். ஆனல் தன் வேலைகளைச் செய்ய அவள் ஒருபோதும் தவறியதில்லை.

"நீ என்றைக்காவது அவளிடம் அன்பாக நாலு வார்த்தை பேசியதுண்டா? உன் பள்ளியில் யாருக்காவது இதுவரையில் ஏதேனும் உதவிகள் செய்ததுண்டா? பகட்டைக் காட்டி ஏமாற்றுவோரிடம் அன்பு இருக்கிறது என்று நம்பி எப்படியெல்லாம் உன் பணத்தை வீணடித்திருப்பாய் என்பதை எண்ணிப்பார்'' என்று நிதானமாக எடுத்துச்சொன்னர். நாயகி தம் மடியில் பேத்தியைப் படுக்கவைத்துக் கொண்டார். ''சவிதா, நீ பழையதையெல்லாம் மறந்து விடு. உன் அம்மா கிளப்பிலிருந்து வந்ததும் நாங்கள் பேசிக்கொள்கிறோம். இன்றிலிருந்து நீ என் அறையில் படுத்துக்கொள். உன் உடம்பு சீராவதற்காக நான் ஒருமாதம் உபவாசம் இருக்கப்போகிறேன். இந்த மாதம் முழுவதும் அறநூல்களைப் பாராயணம் செய்வதைத் தவிர வேறு வேலை எனக்கு இல்லை'' என்றார். கேட்டுக் கொண்டிருந்த சவிதா தன்னையுமறியாமல் எழுந்து உட்கார்ந்து தேம்பித் தேம்பி அழலானாள். சந்தர்ப்பம் தெரியாமல் தொலைபேசியும் விரைந்து ஒலிக்கத் தொடங்கியது. இதுவரையில் கற்சிலை போல் நின்றுகொண்டிருந்த குணசீலன் ஓடிச் சென்று ரிஸீவரை எடுத்துப் பேசினன். செய்தியைக் கேட்டதும் அவன் முகம் வெளுத்துப் போயிற்று. ''அப்பா, அண்ணனுக்கு ஆபத்து'' என்று அலறினன் குணசீலன்.

குடும்ப வாழ்க்கை என்றால் பிரச்னைகள் இப்படித்தான் கடல் அலைகள்போல் முடிவில்லாமல் வந்து கொண்டேயிருக்கும் என்பதை அனுபவத்தில் உணர்ந்தவர் நாயகி. தம் கணவரிடம் அவர் கற்ற பல பாடங்களில் பதருத காரியம் சிதருது என்பதும் ஒன்று. ஒரு குடும்பம் தலைமுறை தலைமுறையாக நின்று நிலைத்துப் பேரும் புகழுமாய்த் தழைப்பது என்பதே ஒரு சாதனைதான். அந்தச்சாதனைக்கு ஆணிவேராய் அமைவதோ ஒவ்வொரு தலைமுறையிலும் அந்த வம்சத்திற்கு நேரும் நலம் பொலம் இரண்டையும் அது அணுகுகின்ற வழிமுறைதான். அதில் ''துன்பம்நேர்கையில் யாழெடுத்து நீ இன்பம்சேர்க்கமாட்டாயா'' எனமற்றவர்களிடம் எதிர்பார்ப்பது ஒருவகை; இடுக்கண் வருங்கால், அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல் என்று உணர்ந்து நகுவது ஒருவகை; 'ஆனது ஆகட்டும், பார்த்து விடுகிறேன் ஒரு கை' என்று துடிப்பது ஒருவகை; அடுத்தவரைப் பழித்துவிட்டுத் தான் தொல்லைகளிலிருந்து விலகிக்கொள்வது ஒருவகை; ஆத்திரங்கொண்டு அறிவிழந்து உணர்ச்சி வேகத்தால் தகாத செயல்கள் புரிந்துவிட்டுப் பின்னர் காலமெல்லாம் வருந்துவது ஒருவகை; ''நன்றே செய்வாய், பிழை செய்வாய், நானே இதற்கு நாயகமே'' என்று காட்சிகளுக்குச் சாட்சியாய் இருந்துகொண்டு இறைவன் பிரச்னைகளைத் தீர்க்கட்டும் என்று காத்திருத்தல் ஒருவகை என்று எண்ணும் பலவகை மாந்தர்கள் பாரினில் உண்டு.

இதில் சிவனடியும், நாயகியும் ஒரு தனி வகையினர். இறைவன் தமக்குக்கொடுத்த அறிவை நன்கு பயன்படுத்தவேண்டும். புலன்கள் போனவழியே புத்தியைச் செலுத்தக் கூடாது. பிறருக்குத் தம்மால் ஆனதைத் தயங்காமல் செய்யவேண்டும். பிறர் இடைஞ்சல் விளைவித்தாலோ அதனை முறியடித்து வாழ்க்கையில் முன்னேறவேண்டும் என்றெல்லாம் அவர்கள் உறுதியான கொள்கைகளைக் கடைப் பிடித்தனர்.

இப்பொழுது ''அண்ணனுக்கு ஆபத்து'' என்று குணசீலன் அலறியதும், ''சரி, ஒரு பிரச்னையை முடித்துக் கொண்டிருக்கிறோம். அதற்குள் அடுத்தது துவங்கிவிட்டது'' என்று புரிந்துகொண்டனர். அது அவர்களுக்குச்

சலிப்பை ஏற்படுத்தவில்லை. இது தான் வாழ்க்கை என்பதைப் புரிந்துகொண்ட மனத் தெளிவு அவர்களின் முகங்களில் பிரதிபலித் தது. கோதாவில் வலுவான பிடிகளால் எதிரி களைக் கலக்கும் ஒரு சிறந்த மல்யுத்த வீரன் தன்மீது விழுகின்ற தாக்குதல்களைத் திறமை யாகச் சமாளித்து, மேல்வருவதை வர வேற்பதே போன்று அவர்களும் அடுத்த களத் துக்குத் தயாரானார்கள்.

தேம்பி அழுகின்ற சவிதாவின் முகத்தை நிமிர்த்தினார் நாயகி. அவளுடைய அழகிய முகம் வெளுத்துக் கன்றிப்போயிருந்தது. ஆறுதலாக அவள் கண்ணீரைத் துண்டினால் துடைத்துவிட்டார். "அழாதே, சவிதா, நடந்ததை மறந்து இனி நல்லவளாக நடப்ப தற்கு முயற்சி செய். எங்கள் துணை உனக்கு என்றைக்கும் உண்டு" என்று தேறுதல் மொழிந்தார். "பாட்டி, குற்றம் செய்தவர் நானும், என் தாயும்; தண்டனையை எதற்காக நீங்கள் அனுபவிக்க வேண்டும்? இந்தத் தள்ளாத வயதில் ஒரு மாதம் பட்டினி கிடப் பதை நான் சகிக்கமாட்டேன்" என்று சொல்லிக் கதறினாள் சவிதா. "நீ சின்னக் குழந்தை. நீ வழி தவறும்படிவிட்டது என்னு டைய குற்றமன்றோ?" என்றார் அந்தத் தாய். சவிதா "இல்லை பாட்டி, நீங்கள் சொன்னதை எல்லாம் ஒழுங்காகச் செய்திருந்தால் எனக்கு இன்றைக்கு இந்தக் கதி நேர்ந்திராது. சொல் வார் பேச்சுக்கேட்டுக் கெட்டுப்போனேம். நாங்கள் நன்றாக இருப்பதைப் பார்த்துப் பொறாமை கொண்டவர்கள் நா இனிக்கப்பேசி எங்களுக்கு நஞ்சைக் கொடுத்துவிட்டனர். பாட்டி, இனி என் கதிதான் என்ன?" என்று ஓங்கிக் குரலெடுத்துப் புலம்பினாள் அந்தப் பேதை. "சவிதா, வாழுகிற வீட்டில் ஒரு பெண் இப்படிப் பெருங்குரல் எடுத்து அழு வது தவறு. முதலில் உன் அழுகையை நிறுத்து" என்று கண்டித்தார் நாயகி. சவிதா வின் புலம்பலும் சிறிது சிறிதாகத் தேய்ந்து ஓய்ந்தது. தன்னை அறியாமல் பாட்டியின் மடியில் தலைவைத்துத் தூங்கிப் போனாள். அவளை இதுவரை ஆட்டிவைத்த பேயும் அவளைவிட்டு விலகிப்போய்த் தூங்கலாயிற்று. அலர்மேல் மங்கை தாயாரைப் போன்ற நாயகியின் முன்னர் தன் ஜம்பம் எதுவும் பலிக்காது என்பதை அது உணர்ந்திருந்தது. அவளை அங்கேயே படுக்க வைத்துவிட்டு அடுத்த அறைக்குச் சென்றபோது அவர் கண்ட காட்சி அவரைச் சற்றே திகைக்க வைத்தது. தமையனைப்பற்றித் தகப்பனருடன் பேசுவதற்காகக் குணசீலன் அங்கே சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் புயல்போல அந்த அறைக்குள் நுழைந்து அவன் காலடியில் விழுந்து மயக்கமானாள் சித்ரா. அவளைத் தான் அவர்கள் இருவரும் ஆசுவாசப்படுத்திக் கொண்டிருந்தனர். அவளுடன் வந்திருந்த தோழி ஸ்ரீலதா விஷயத்தை விளக்கினாள்.

"எங்களை மன்னியுங்கள் அம்மா. நாங்கள் செய்யாத பாவம் இல்லை. எங்கள் புத்தி இப் பொழுதுதான் தெளிந்தது" என்று கண்ணீர் வடித்துக்கொண்டே கூறினாள் ஸ்ரீலதா. நாயகி யும் அவளும் சேர்ந்து சித்ராவை ஒரு சோபா வில் கிடத்தினர். முகத்தில் தண்ணீர் தெளித் தும் அவள் விழித்துப் பார்க்கவில்லை. "டாக் டரைத் தொலைபேசியில் அழைத்திருக்கிறேன் அம்மா, இதோ வந்துவிடுவார்" என்றான் குண சீலன். "ஸ்ரீலதா, உன் தோழிக்குக் கிளப்பில் என்னதான் ஆயிற்று?" என்று கேட்டார் நாயகி. "இன்று மாலை சித்ரா கிளப்பிற்கு வந்தபோது மற்றப் பெண்களெல்லாம் அவளை ஏளனமாகப் பார்த்து நகைத்தபடி இருந்தார் கள். முதலில் அவளும் நானும் இதைக் கவ னிக்கவில்லை. ஆனால் சங்க ஆண்டு விழா நிகழ்ச்சிகளைக் குறித்துப் பேசுவதற்கு அணு கிய போதும் அவர்கள் அவளை அலட்சியப் படுத்தியபோதுதான் ஏதோ விபரீதம் நடக் கிறது என்பதை உணர்ந்தோம். சித்ரா கோபத்தோடு தலைவியைப் பார்த்து ஏன் எல் லாரும் தன்னை ஒருமாதிரியாக நடத்துகிறார் கள் என்று கேட்டாள். "நாம் எப்படி நடந்து கொள்கிறோமோ அப்படித்தான் நாம் நடத்தப் படுவோம்" என்றாள் தலைவி. "புரியவில்லையே, நீங்கள் என்னிடம் என்ன குற்றத்தைக் கண் டீர்கள்?" என்று கேட்டாள் சித்ரா. "ஆமாம், அவரவர் குற்றம் அவரவர்க்குத் தெரியாது தான். சித்ரா, உன்னால் நம் சங்கத்திற்கே கெட்ட பெயர். நம் உறுப்பினர்களை வெளி யில் பார்ப்பவர்களெல்லாரும் உன்னைப்பற்றித்

தான் ஏசிப் பேசுகிறுர்கள்'' என்றுள் தலைவி.

கள் குடித்தவனைத் தேள் கொட்டினுற்போலாயிற்று சித்ராவின் நிலைமை. அவள் உடம்பு முழுவதும் கோபத்தால் நடுங்கியது. முகம் மிகவும் சிவந்துபோய் விகாரமாயிற்று. "எதற்காக இவர்கள் என்னை ஏசவேண்டும்? என்னைப் பேசியவள்மட்டும் மிகவும் லட்சணமோ?" என்று ஆங்காரமாகக் கேட்டுக்கொண்டே அருகிலிருந்த புத்தகத்தை எடுத்து வீசி எறிந்தாள் சித்ரா. இப்பொழுது அவளைவிடக் கோபம் அதிகமாயிற்று தலைவிக்கு. "சித்ரா, கௌரவமான இடத்தில் கீழ்த்தரமாக நடந்துகொண்டு உன் சுயரூபத்தைக் காட்டாதே" என்று கத்தினுள். ''உங்கள் கௌரவத்தைத் தான் பார்த்துவிட்டேனே. என் பணத்தைப் பிடுங்கி நாள்தோறும் விருந்து என்றும், கேளிக்கை என்றும் வயிறு புடைக்கத் தின்றதுமல்லாமல் இப்போது என்மீதே அபாண்டமாய் ஏதோ சொல்கிறீர்களே, இதுதான் உங்கள் நாகரிகமோ?" என்று கூவினுள் சித்ரா. அப்பொழுது தலைவி சொன்ன செய்திதான் அவளை அதிர்ச்சியடையச் செய்தது: ''நான் வெளிப்படையாகவே பேசிவிடுகிறேன் சித்ரா. நீ பல இடங்களிலும் தாராளமாக நடந்துகொள்வதைப் பார்த்துப் பலரும் உன்னைப்பற்றித் தரக்குறைவாகப் பேச ஆரம்பித்துவிட்டனர். எவ்வளவு காலத்துக்குத்தான் பணபலத்தைக்கொண்டு இதையெல்லாம் மூடிமறைக்க முடியும்? அதற்கேற்றுற்போல் இன்று காலை நம் ஊரிலேயே பெரிய டாக்டரின் வீட்டில் நாங்கள் நாலைந்து பேர் நன்கொடை வசூலிக்கச் சென்றபோது உன் மகளை அங்கே பார்த்தோம். மயக்க மாத்திரையைத் தொடர்ந்து சாப்பிட்டு வந்திருக்கிறுளாம். உன் கணவர்தாம் அழைத்து வந்திருந்தார்'' என்று சொல்லி முடித்தாள் தலைவி.

ஒரே நேரத்தில் இரண்டு கொடிய விஷப் பாம்புகள் தன்னைத் தாக்கியதாக உணர்ந்தாள் சித்ரா. பைத்தியம் போல் பிதற்றிக்கொண்டே நாற்காலிகளை எடுத்து அங்கிருந்தோர் மேலெல்லாம் எறியலானுள். நாலைந்து பேர் அவளைப் பிடித்துக் கன்னத்தில் அறைந்த பிறகுதான் அவளுடைய வெறி தணிந்தது. அவளைப் பத்திரமாக வீட்டுக்குக்கொண்டு செல்லும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தனர்" என்று ஸ்ரீலதா கூறி முடிக்கவும் டாக்டர் உள்ளே நுழையவும் சரியாக இருந்தது. சோதனைகளை முடித்த பின் ''இது வெறும் மன அதிர்ச்சி. உடலுக்கு அதீதமான களைப்பைத் தவிர வேறு தீங்கு ஒன்றும் நேரிடவில்லை. அவள் கண் விழித்த பிறகு இரண்டு மூன்று நாட்களுக்கு எதுவும் பேசாதபடி பார்த்துக் கொள்ளுங்கள். அவளிடம் சற்றுப் பரிவாக நடந்துகொண்டால்தான் அவளுடைய மனச் சுமை குறையும். இந்த மருந்துகளை வேளை தவருமல் கொடுங்கள். நான் நாளை வந்து பார்க்கிறேன்''என்று கூறிச் சென்றுர் டாக்டர்.

ஆடு திருடிய கள்ளனைப் போல் விழித்துக் கொண்டிருந்தாள் ஸ்ரீலதா. நல்ல குடும்பத்துப் பெண்ணை சித்ராவைத் தகாத வழிகளில் எல்லாம் பழக்கப்படுத்திவிட்டவள் அவள் தான். இப்பொழுது அதன் விளைவுகள் விசுவரூபம் எடுக்கவே அவற்றைத் தாங்க முடியாமல் திணறினுள். மாதர் சங்கத்தில் இனி தன்னையும் மதிக்க மாட்டார்கள் என்பதை உணர்ந்தே இருந்தாள். தன் சொத்துக்கள் கடனில் மூழ்கிக்கொண்டிருப்பது வெளியே தெரியவந்தால் இப்போதுள்ள தன் ஆருயிர் சிநேகிதிகள் தன்னிடம் எப்படி நடந்துகொள்வார்கள் என்பதும் அவளுக்கு நன்ருகவே தெரியும். கணவனைப் பிரிந்து வாழும் தனக்கு வாழ்க்கையில் பிடிப்பே அற்றுப் போய் விடுமோ என்ற பயம் அவளைப் பற்றிக்கொண்டது. பேயறைந்தது போன்ற அந்த முகத்தைப் பார்த்ததுமே விஷயத்தை ஊகித்துவிட்டார் நாயகி. அவளை உள்ளே அழைத்துச் சென்று முகம் கழுவச் செய்து சிற்றுண்டி தந்தார்.''இதோ பார், உன் கணவன் ஏன் இரண்டாம் திருமணம் செய்துகொண்டான் என்பது இப்போதாவது உனக்குப் புரிந்திருக்கும். நீயும் சித்ராவும் இனிமேல் எங்கும் போகவேண்டாம். தேவி துர்க்காலட்சுமியைச் சரண் புகுந்து உங்கள் உள்ளத்தை முதலில் திடப்படுத்துங்கள். நிலையான சந்தோஷம் என்பது ஆடம்பரங்களில் பணத்தை இறைப்பதனுல் வந்து விடாது. மற்றவர்களுக்காக உழைத்து அவர்கள் மகிழ்ச்சி அடைவதைப் பார்ப்பதில் தான் உண்மையான நிம்மதி இருக்கிறது.

நான் உங்களுக்கு ஒரு நல்லவழிகாட்டுகிறேன். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார். உடனே பதறிக்கொண்டு எழுந்தாள் ஸ்ரீ லதா. "அம்மா, இதுவரை ஒழுக்கங்கெட்டுப்போய் என் அந்தஸ்தை உயர்த்திக்கொள்ள நான் செய்த முயற்சிகள் போதும். என்னைப் பிடித்து ஆட்டிய பணப்பிசாசு என்னை விட்டுப் போய்விட்டது. இனி நீங்கள்தாம் எனக்கும் என் குழந்தைக்கும் வழிகாட்டி" என்று உருக்கமாகச் சொன்னாள். "அப்படியானால் சரி. அடுத்த மாதம் முப்பது அனாதைக் குழந்தைகளுக்குப் பொறுப்பேற்றுக்கொண்டு ஒரு சிறிய தொழிற்பள்ளிக்கூடம் ஆரம்பிப்பதாகப் பெரியவர் திட்டம் செய்திருக்கிறார். நீ வேண்டுமானால் அங்கேயே தங்கி அலுவலகப் பணிகளை மேற்கொள்ளலாம். கண்டபடி அலையும் உன் மனதிற்கு அந்தச் சூழ்நிலை நிச்சயம் ஒரு வலி மருந்து போல் உதவி செய்யும். சரி, நீ நேரத்தோடு கிளம்பு. நாளை மறுநாள் இதைப்பற்றி விரிவாகப் பேசலாம்" என்று கூறி அவளை அனுப்பிவைத்தார். வேடன் அம்பு பட்ட மானுக்கு அம்பை நீக்கிக் களிம்பு பூசி மெல்லத் தடவிக்கொடுத்தது போலிருந்தது ஸ்ரீலதாவுக்கு. முற்றிலும் ஒரு புதிய பெண்ணாக அந்த அறையிலிருந்து வெளியேறினாள் அவள்.

அன்று இரவு நெடுநேரம் கழித்துக் கண் விழித்த சித்ராவுக்கு நடந்தவையெல்லாம் நினைவில் மீண்டும் தோன்றி உள்ளத்தை உறுத்தலாயின. தான் பிறந்த குடும்பம், புகுந்த குடும்பம் இரண்டுக்கும் தான் பெற்றுத் தந்த பெயரை எண்ணியதும் அவள் அந்தராத்மாவில் வேதனை சூழ்ந்தது. இளமைச் செருக்கால் தான் அட்டகாசமாக நடந்து கொண்டபோதெல்லாம் தன் மாமி ஏன் தன்னைக் கண்டித்துத் திருத்த முயன்றார் என்பது இப்போதுதான் நன்றாகப் புரிந்தது சித்ராவுக்கு. பணம் போனால் மீண்டும் உழைத்துச் சம்பாதித்துவிடலாம். ஆனால் மானம் போனால் மீண்டும் வராது அன்றோ? "தாயே, லலிதாம்பிகா, இனி நீயே எனக்குக் கதி. என் பிழைகளை மன்னித்து நீதான் ஒரு சரியான மார்க்கத்தை எனக்குக்காட்டவேண்டும். இந்த ஹிஸ்டீரியா நோயிலிருந்து என்னை விடுவித்து மாமிக்கு உகந்த மருமகளாக என்னை நீதான் மாற்றவேண்டும். என் குழந்தைகள் இனிமேல் உன் பொறுப்பு. அம்மா, இனி மூச்சு முடியுமட்டும் உன் பேச்சையே நான் பேசுவேன். என்னுள் குடிகொண்ட மமதை என்ற மகிஷியை நீயே விரட்டவேண்டும். நான் உன் அடிமை" என்று மனம் உருகி அன்றிரவு முழுவதும் கண்ணீர் வடித்துப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள் சித்ரா. மறுநாள் பொழுது விடிந்தபோது தன்னுடைய உள்ளமும் நிர்மலமாக மாறி இருந்ததை அறிந்து பூரித்துப் போனாள். குளித்துத் தலை துவட்டிவிட்டுப் பூஜை அறையில் அமர்ந்து நெடுநேரம் தேவி ஸ்தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டிருந்தாள். தமது மலர்ந்த முகத்தில் புன்னகையைக்காட்டி அவளை அங்கீகரித்தார் நாயகி.

தமது அறையில் அமர்ந்து ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்த சிவனடி அப்பொழுது ஸ்ரீமந் நாராயணனின் திவ்வியமான திருநாமங்கள் ஒலிப்பதைச் செவியாரக் கேட்டார். சித்ராவோடு அவருடைய பேரன் பேத்திகள் அமர்ந்து விஷ்ணு சகஸ்ரநாமம் முழுவதையும் மனனம் செய்து கொண்டிருந்தனர். 'இறைவனுக்குத்தான் எத்தனை பெயர்கள்! அத்தனையையும் சொல்லி முடித்தாலும் அந்தத் தித்திப்புத் திகட்டவில்லையே, இது என்ன அதிசயம்! 'இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே' என்ற ஆழ்வாரின் அமுதமொழிதான் எவ்வளவு பொருள் பொதிந்ததாகக் காண்கிறது' என்று வியந்து போனார் சிவனடி.

பெற்றமகன் பேராபத்தில் இருக்க உற்ற தெய்வமே தனக்கு அவனைவிட மேலான உறவு என்று இவ்விதம் ஆழ்ந்த பக்தியில் ஈடுபடுவோர் உலகில் ஒரு சிலர்தாம் இருக்கக்கூடும். உண்மையிலேயே அவருடைய பிள்ளை குணேச்சரன் ஒரு பயங்கரமான சூழலில் சிக்கிக்கொண்டிருந்தார். நாடறிந்த நல்லதொரு சமூக நலத்தலைவர் அவர். தம்மால் இயன்ற அளவு ஆதரவற்றவர்களுக்கு மருத்துவ உதவி, சட்ட ஆலோசனை, உள்ளாட்சித் துறையிலிருந்து பெற்றுத்தரத்தக்க சுகாதார வசதிகள், சமூகத்துக்குப் புறம்பாக நடக்

கின்ற வாணிபத் தவறுகளுக்கு எதிர் நடவடிக்கை எடுத்தல், ஆற்றல் இருந்தும் கல்வி கற்க இயலாமற்போனவர்களுக்குப் பொருள், உடை, உணவு, இடம் முதலிய வசதிகளை உண்டு பண்ணித் தருதல் இவைபோன்ற பொதுக்காரியங்களில் ஈடுபட்டு வந்தார். அவர் எந்த ஒரு தனிக்கட்சியையும் சார்ந்தவரல்லர். ஆனல் எல்லாக் கட்சியினரும் அவர்பால் தனி அன்பும், மதிப்பும் வைத்திருந்தனர். நாட்டின் தலைநகரத்தில் அவர் குடியிருந்தாலும் தமிழ் நாட்டின் மீதும், தமிழ்மொழியின் மீதும் அவருக்கிருந்த பாசம் சிறிதும் குறையவில்லை. கலைவிழாக்கள், கருத்தரங்குகள் என்று புதுதில்லியில் அவர் ஏற்பாடு செய்கின்ற நிகழ்ச்சிகளில் பொதுமக்களும் பேரறிஞர்களும் பேரார்வத்துடன் கலந்து கொள்வது வழக்கம். சமூகத்தின் போக்குகளைக் குறித்து அவர் செய்யும் விமரிசனங்கள் என்றைக்கும் பொய்த்ததில்லை. நடுநிலையில் நின்று பிரச்னைகளை ஊன்றிக் கவனித்துத் தெளிவான முடிபுகளைக் கூறுவாராதலால் அவருடைய அபிப்பிராயங்களுக்கு என்றுமே ஒரு தனி மதிப்பு இருந்து வந்தது. இவ்விதம் தம் தகப்பனுரைப் போலவே அவரும் சான்ருண்மையிலும், தாளாண்மையிலும் சிறந்து விளங்கினர்.

அவரைப் போலவே அவருடைய மைந்தன் அருள்மொழியும் தான் படிக்கின்ற தொழில் நுட்பவியல் கல்லூரியில் மிகச் சிறந்த மாணவர் தலைவனுக உருவாகி வந்தான். மற்றக் கல்லூரிகளிலிருந்து அவன் கல்லூரி தரத்திலும் உழைப்பின் தகுதியிலும் மிகவும் வேறுபட்டிருந்தது. பாடத் திட்டங்களில் ஆழ்ந்த அக்கறை செலுத்தாதவர்கள் அக்கல்லூரியில் தொடர்ந்து படிக்க இயலாது. ஒவ்வொரு மாதமும் தாங்கள் தகுந்த அளவு முன்னேறி வருவதைத் தேர்வுகளிலும், தாங்கள் சமர்ப்பிக்கும் பாடங்களிலும் அவர்கள் நிருபித்தாக வேண்டும். கலை, விளையாட்டுப் போன்ற துறைகளிலும் அவர்கள் போதுமான அளவு ஊக்கத்துடன் ஈடுபட்டாக வேண்டும். இத்தகைய வல்லவர்களின் குழுவில்தான் அருள்மொழி தலைமாணக்கனுகத் திகழ்ந்தான்.

சம்பவம் நிகழ்ந்த அன்று அருள்மொழி தன் பாடத் திட்டத்தில் மூழ்கியிருந்தான். ஒரு விமானத்தைச் செலுத்தும் பொறியில் மிகவும் நுணுக்கமான நூற்றுக்கணக்கான பாகங்களும் கருவிகளும் இருக்கும். 'சுண்டைக்காய் கால்பணம், சுமைக்கூலி முக்கால் பணம்' என்பது போல இந்தியாவிலேயே விமானங்களைத் தயாரித்தாலும் அந்த நுண்ணிய உறுப்புக்களை மிகுந்த பொருட்செலவில் அந்நிய நாடுகளிலிருந்து தருவித்துக் கொள்வதுதான் வழக்கம். இவற்றில் சிலவற்றையாவது தகுந்த தரத்துடன் நம் நாட்டிலேயே செய்யக் கற்றுக் கொண்டால் பல நூறுகோடி ரூபாய் நமக்கு மீதமாகும். ஆகவே நாடு முழுவதும் பல்வேறு ஆய்வு நிலையங்கள் இத்தகைய நுண்ணியல் கருவிகளைத் தயாரிப்பதற்காக ஆய்வுகள் நடத்தி வருகின்றன. இந்தத் துறையில் முப்பது வருட அனுபவம் வாய்ந்தவர்களையும் திணறடிக்கக் கூடிய சில கடினமான பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு குறிப்புகளையும், அதற்குத் தகுந்த மாதிரிகளையும் உருவாக்கிக் கொண்டிருந்தான் அந்த இளம் மேதை.

அப்பொழுதுதான் அந்தக் கலவரம் தொடங்கியது. முன்பின் தெரியாத ஊர் மக்கள் பலர் தடி, கோடரி, கம்பு என்று பல ஆயுதங்களை ஏந்திக்கொண்டு மிகவும் கீழ்த்தரமான வசைச் சொற்களைக் கூவிக்கொண்டு அந்தக் கல்லூரியில் நுழைந்தனர். கற்களால் கண்ணடிக் கதவுகளை உடைப்பதும், கண்ணில் பட்டவர்களையெல்லாம் போட்டு அடித்து நொறுக்குவதும், ஆங்காங்கே தீயிட்டுக் கொளுத்துவதுமாக ஒரே களேபரமாயிருந்தது. நெடுநேரம் கழித்துக் காவல் துறையினர் அங்கு வந்து சேர்ந்தனர். அமைதியை நிலைநாட்டுவதே பெரும்பாடாய்ப் போயிற்று. அதன் பிறகு என்ன ஏது என்று அருள்மொழி விசாரித்தறிந்த உண்மைகள் அவனைத் திடுக்கிடச் செய்தன. அவன் கல்லூரி அனைத்திந்திய கல்லூரியாதலால் அதில் பலவகைப்பட்ட மாணவர்களும் இருந்தனர். ஒரு சிலர் படிப்பில் சூரர்களாயிருந்தாலும் குணத்தில் அசுரர்களாயிருந்தனர். உழைத்துப் படித்த நேரம் போக மற்ற நேரத்தில் எத்தகைய செயலில் வேண்டுமானுலும் ஈடுபடலாம்; அதில் தவறேதும் இல்லை; அது உடலுக்குப் புத்துணர்ச்சி

யைத் தரும் என்பதே அவர்களுடைய பிடிவாதமான எண்ணம். நல்லவர்கள் அருள்மொழியைப் பின்பற்றியது போல அநியாயம் செய்ய அஞ்சாதவர்கள் நிர்மல்குமார், மோகன் ஆர்தர், அமிர்தம் என்ற மூன்று பேர் பேச்சைக் கேட்டு நடந்தனர். அன்றைக்கு முன்தினம் இவர்கள் பக்கத்திலிருந்த ஒரு பெரிய ஓட்டலுக்குச் சென்று கண்டபடி மது வகைகளை நிறையக் குடித்துவிட்டு நள்ளிரவில் மனம் போன போக்கில் தங்கள் வாகனங்களை முரட்டுத்தனமாக ஓட்டி விடுதிக்குத் திரும்பிக்கொண்டிருந்தனர். அப்பொழுது திடீரென்று அவர்களுடைய வாகனங்கள் கிரீச்சிட்டு நின்றன. ஓர் ஏழைச் சிறுமி மோகன் ஆர்தரின் வண்டியில் சிக்கிக் கூழாகாமல் மயிரிழையில் தப்பினாள். நடைபாதையில் உறங்கிக்கொண்டிருந்த அந்தப் பெண், பாவம்! திடீரென்று உறக்கம் கலைக்கப்பட்டு பயத்தினால் வெடவெடவென்று நடுங்கத் தொடங்கினாள். மோகனும், அவன் தோழர்களும் தங்கள் தவறை உணரவில்லை. மாறாகக் கூப்பாடு போட்டுக்கொண்டிருந்த மற்ற ஏழைகள்மீது பாய்ந்தனர். மிகவும் அநாகரிகமாகக் கொச்சை வார்த்தைகளை அள்ளி வீசினர். அந்தச் சிறுமி பதறிக்கொண்டே தன் அக்காவிடம் சென்றதை நிர்மல் கவனித்தான். 'ஏழைக்குப் புகலிடம் ஏது' என்று ஏங்கிக்கொண்டே அந்தச் சிறுமியும் அவள் அக்காவும் தயங்கித் தயங்கிச் சென்று வேறு ஒரு மூலையில் முடங்குவதைக் கண்டான். பலநூறு ரூபாய்கள் செலவு செய்து அன்று அவர்கள் தின்றிருந்த புலாலும், மதுவும் உடம்பில் திமிரை ஏற்றியிருந்தன. அந்தப் பெண்ணிடம் சென்று அவளை வம்புக்கிழுத்து தகாதமுறையில் நடந்தனர். அவ்வளவுதான், இதுவரை பொருமிக்கொண்டிருந்த நடைபாதை வாசிகள் இப்போது புயலாகச் சீறி அவர்கள்மீது பாய்ந்தார்கள். 'தப்பித்தேன் பிழைத்தேன்' என்று மூவரும் வண்டியில் ஏறிப் பறந்தனர். அவர்களை ஏற்கனவே அடிக்கடி பார்த்திருந்த ஒருவன் வழிகாட்ட அந்தக் கூட்டம் ஊரைத் திரட்டிக்கொண்டு மறுநாள் காலை கல்லூரி விடுதிக்குள் புகுந்து நியாயம் கேட்டது. அமிர்தத்தை அழைத்து விசாரித்தால் அந்தச் சிறுமி தான் தங்கள் வண்டிக்குக் குறுக்கே ஓடிவந்தாள், தாங்கள் வேறு எதுவும் செய்யவில்லை என்று சாதித்தான். இந்தக் குழப்பத்தில் ஒரு பாவமும் அறியாத மாணவர்களுக்கும் காயங்கள் ஏற்பட்டன; ஆனால் இந்த மூவர் மட்டும் வழக்கம்போல் தந்திரமாகத் தப்பித்துக்கொண்டார்கள். லட்சக்கணக்கில் பொருட்சேதம் நேர்ந்தது எங்கும் பதட்டநிலை நிலவியது.

அருள்மொழி மாணவர் தலைவன் என்ற முறையில் அந்த மூன்று முரடர்களையும் அழைத்துக் கடுமையாகக் கண்டித்தான். குற்றத்தை ஒப்புக்கொண்டு சட்டத்தின் முன் சரணடைய வேண்டும் என்று வற்புறுத்தினான். அந்த அரக்கர்களோ தங்களுக்கென்று ஒரு சோற்றுப்பட்டாளத்தைச் சேர்த்துக்கொண்டு அருள்மொழியிடம் ஆணவமாகப் பேசினர். அவன் பெரிய புத்தனோ என்று கிண்டல் செய்தனர். பேச்சுவார்த்தைகள் முற்றி அவர்கள் கைநீட்டி அடிக்கவும் செய்தனர். அருள்மொழிமீது அபிமானம்கொண்ட அவனுடைய நண்பர்கள் அவனை மீட்பதற்காகத் தாங்களும் பதிலடி கொடுக்க வேண்டியதாயிற்று. கடைசியில் காவலர்கள் வந்துசேர்ந்தனர். தீர விசாரியாமல் பெரிய அதிகாரி தனக்கு வேண்டியவர்களின் பேச்சைக் கேட்டுக்கொண்டு அருள்மொழியே தவறு செய்தவன் என்று கூறி அவனைக் கைது செய்து கொண்டுபோனார்.

விஷயத்தைக் கேள்விப்பட்ட குணேச்சரனுக்கு உடலும் உள்ளமும் பதறின. பளிங்கு போன்ற தூய மனத்தினனை தன் மகனை இந்த நிகழ்ச்சி என்ன பாடுபடுத்துமோ என்று துடித்துப்போனார். தன் துணைவர்களையும் அழைத்துக்கொண்டு காவல் நிலையத்திற்கும், குற்றம் நடந்த இடத்திற்கும் சென்று உண்மை நிலவரத்தை அறிந்துகொண்டார். பத்திரிகைக்காரர்களை அழைத்துப் பிழை செய்தவர்களைச் சுட்டிக்காட்டிச் சந்தேகத்துக்கு இடமில்லாமல் தக்க ஆதாரங்களையும் கொடுத்தார். அருள் உடனே விடுதலை செய்யப்பட்டான். அதே நேரத்தில் வெளியே தெரியாத எலும்புக் காயங்களுடன், மயக்கத்தினால் ஜன்னியும் ஏற்பட்டுப் பிதற்றிக்கொண்டிருந்த அந்த ஏழைச் சிறுமியும் உயிரைவிட்டாள்.

இது எரிகிற தீயில் எண்ணெய் ஊற்றியது போலாயிற்று. அந்த மூன்று போக்கிரிகளும் மிகுந்த செல்வாக்குப் படைத்தவர்களாதலால் தாங்கள் தப்பித்துக் கொள்வதற்காகச் சில அரசியல் கட்சிகளையும், சமூகத்தலைவர்களையும் பணம் கொடுத்து ஏவிவிட்டார்கள். இது பெரிய இனக்கலவரத்தில் போய் முடிந்தது. இந்தக் குழப்பத்தில் குணேச்சரன்மீது பகைமை கொண்டிருந்த பழைய எதிரிகள் சேர்ந்து அவரை ஒழித்துக்கட்டிவிடச் சதிச் செய்தார்கள். சமூகத்தில் அமைதியை நிலை நாட்டும் பொருட்டு மக்களிடம் நேரடியாகச் சென்று நடந்ததையெல்லாம் மறந்து எதிரிகளை மன்னிக்குமாறு அவர் கேட்டுக்கொண்டிருந்த சமயத்தில் அவரைப் படுகாயப்படுத்திவிட்டு ஓடிப்போயினர். உயிருக்கு ஆபத்தான நிலையில் அவரை மருத்துவமனையில் அவசரப் பிரிவில் சேர்த்து சிகிச்சை செய்துகொண்டிருந்தார்கள்.

ஆத்மனும், குணசீலனும், மணிவாசகனும் விமானத்தில் புதுதில்லிக்குச் சென்று நேரே மருத்துவமனையை அடைந்தனர். அங்கே அருள்மொழி, அவன் தாய் ஆண்டாள், தம்பி குருவாயூரன், தங்கை அருட்செல்வி ஆகிய நால்வரும் சோகமே உருவாய் சத்திரசிகிச்சை நடக்கும் அறைக்கு அருகே நின்றுகொண்டிருந்தனர். குணேச்சரன் ஒருவருக்கும் தீங்கு நினைக்காதவர். ஆகையால் நூற்றுக்கணக்கான அபிமானிகள் என்ன நேருமோ என்று கதி கலங்கிப்போய் வெளிச்சுற்றில் நின்றுகொண்டிருந்தார்கள். நேராகத் தன் அண்ணியிடம் சென்ற குணசீலன் ''அண்ணி, வருத்தப் படாதீர்கள். இந்நேரம் அப்பா சிவ மஹிம்ன ஸ்தோத்திரமும், அம்மா கந்தர்சஷ்டி கவசமும் மனனம் செய்துகொண்டிருப்பார்கள் என்று உங்களுக்குத் தெரியும். நல்லதையே நினைத்து, நல்லதையே செய்துவரும் என் அண்ணனுக்கு ஒன்று நேர்ந்தால் அது அவர்கள் உயிர்களையும் பலிவாங்கிவிடும். தெய்வம் அந்த அளவுக்குக் கொடூரமாக நடந்து கொள்ளுமா?'' என்று ஆறுதலாகக் கேட்டான். ஆண்டாள் தான் நாடுபோற்றும் பரத நாட்டிய நிபுணர் என்பதை அந்தக் கணத்தில் மறந்துபோனாள். விம்மி விம்மி அழுது கொண்டே, ''எல்லாம் சரிதான் தம்பி. நல்லவர்களுக்கு எப்பொழுதும் இந்த நாட்டில் ஏற்படும் கதியைப் பார்த்தீர்களா?'' என்று கேட்டுவிட்டுத் தன் மகளை ஆதுரமாக அணைத்துக்கொண்டாள். தன் இரண்டாம் நாத்தனார் திருச்செல்வியின் அருமை மைந்தன் மணிவாசகன் அங்கே வந்தது அவளுக்கு அந்த நேரத்தில் மிகவும் ஆறுதலாக இருந்தது. மேற்கு ஜெர்மனியில் படித்துக்கொண்டிருந்த அவன் விடுமுறைக்காகத் தமிழ்நாடு வந்திருந்தான். தவிர, ஆத்மனைக் கள்ளர்கள் கடத்திப்போக முயற்சி செய்தார்கள் என்று கேள்விப்பட்ட போது மனம் உலைந்துபோயிருந்த அவளுக்கு இப்பொழுது அவனையும், பக்கத்தில் புடைத்த தோள்களையும், தீட்சண்யம் மிக்க கண்களையும் கொண்ட மணிவாசகனையும் பார்த்தவுடனே தன்னையுமறியாமல் ஒரு தெம்பு பிறந்தது. ஆத்மன் தன் மாமன் குழந்தைகளைப் பரிவோடு தட்டிக்கொடுத்தான். ''ஒன்றும் கவலைப் படாதீர்கள். சத்தியம் நம் பக்கம்தான். ஆகவே நல்லூரும் நமக்குத்தான் துணை செய்யும்'' என்று மெதுவாகச் சொன்னான்.

அடுத்தநாளே அவன் வாக்குப் பலித்தது. ஆபத்துக் கட்டத்திலிருந்து பிழைத்தெழுந்தார் குணேச்சரன். மற்றொரு நிகழ்ச்சியும் அன்று நடந்தது. தாங்கள் எப்படியோ சட்டத்தின் பிடியிலிருந்து தப்பித்துவிட்டதைக் கொண்டாடுவதற்காக மற்றுமொருமுறை பெரிய விருந்து வைத்து வெறியாட்டம் போட்டனர் நிர்மல்குமார் கூட்டத்தினர். அதில் அவனே குடிவெறியில் மோகன்ஆர்தரின் குடும்பத்தைப்பற்றித் தாறுமாறாகப் பேசவே பெரும் சண்டை மூண்டது. கடைசியில் கூச்சலைப் பொறுக்கமுடியாமல் அக்கம்பக்கத்துப் பெரிய மனிதர்கள் சேர்ந்து அவர்களைக் கட்டி இழுத்துக்கொண்டுபோய் காவல் நிலையத்தில் சேர்த்தார்கள். பின்னர் அவர்கள்மீது நடந்த வழக்கில் ஆளுக்கு ஆறுவருடம் சிறை தண்டனை என்று தீர்ப்பாயிற்று.

அடுத்தவாரம் திருவேங்கடத்தானைச் சென்று தரிசிக்க ஏற்பாடுகள் செய்துகொண்டிருந்தபோதுதான் முதல் அண்ணன் குணபரன் கானடா தேசத்திலிருந்து அனுப்பிய அவசரச் செய்தி வந்தது. (தொடரும்)

---

# குட்டித் திருவாசகம்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A.)

"செய்தொழிலும்" —(அதிவீரராமர்) செய்கின்ற செயல்களையும். ஆன்மாக்களுக்கு நல்வினை வயத்தால் மானுட உடம்பு வந்து அமைகிறது. கருவி கரணங்கள் அமைகின்றன. மானுட உடம்பும், கருவி கரணங்களும் இறைவன் அருளின்படி இயங்குவன; இயங்க வேண்டும்.

செல்லும் வழிகள் அனைத்தும் நல்ல நெறிகள் ஆக வேண்டுமானல் கருவி கரணங்களை இறைவனுக்கு உடைமையாக ஆக்கவேண்டும். பகுத்தறிவு பெற்றதன் பயன் அதுவே ஆகும். உணவு உண்பதற்காகக் கையும் வாயும் மனிதனுக்குப் படைக்கப்படவில்லை. உடல் கருவிகளைக்கொண்டு வயிற்றுப்பாட்டைக் கழிப்பன விலங்குகள் பறவைகள். மனிதன் அத்தகையவன் அல்லன். வயிற்றுப் பாட்டுக்காகவே மனிதன் வாழ்ந்திருந்தால், மெய்யுணர்வு நூல்களையும், அருள் நூல்களையும் எழுதுவதற்குக் கைகள் இல்லாமல் போயிருக்கும். "வாழ்த்த வாயும், நினைக்க நெஞ்சம், தாழ்ந்து பணியத் தலையும்" தந்தருளிய வள்ளல் இறைவன். நம் கருவி கரணங்களை இறைவனைப் பற்றிய சிந்தனையில் செலுத்துதல் வேண்டும்.

செய்வதற்கு எளிமையான செயல், மென்மையான செயல்; செய்வதற்கு அருமையான செயல், வன்மையான செயல். இந்த இரண்டு வகைச் செயல்களும் நற்செயல்களாக அமையின் அவை சிவ பரம்பொருளை வழிபடுவதற்குரிய அறம் ஆகும். அதாவது, சிவபெருமானைக் கருதிச் செய்யும் கடமை ஆகும். எளிமையான செயல் ஆனாலும், வன்மையான செயலானாலும் சிவனை நினைத்து வழிபடுவதற்கு உரியனவாகச் செய்யப்படும்போது, நல்ல செயல்கள் ஆகின்றன. அதிவீரராம பாண்டியர் சிவன் அன்பில் தோய்ந்தவர். எனவே, அவர் செய்யும் செயல்கள் எல்லாம் சிவன் செயல்களாக ஆகின்றன.

இருப்பினும் அவர் என்ன கூறுகிறார்? "செய் தொழிலும் அறியேனை" — இவை போன்ற நற்செயல்கள் எல்லாம் அறியாதவன் நான் என்கிறார். தன் முனைப்பு அற்றவர் அதிவீரராமர். குருவின் அருளால் வந்த திருவருளைப் பெற்றவர் அவர். எனவே தன்னடக்கத்துடன் இயம்புகின்றார்.

"நினைத்த குறியும்" — செய்யும் செயல்களில் நின்று கருதும் மூர்த்திகளையும் அறியமாட்டாதவனாக இருக்கிறேன்.

தத்துவத்தில் யோகம் என்று ஒன்று சொல்லப்படும். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று சொல்லுவார்கள். யோகம் என்னும் சொல்லுக்கு "ஒன்று கூடுதல்" என்பது பொருள். சிவபரம்பொருளுடன் ஒன்றுபடுவது சிவயோகம்.

சிவயோகம் இரண்டு வகைப்படும். ஒன்று ஆதாரயோகம். இன்னொன்று நிராதாரயோகம். இந்த இரண்டு யோகங்களும் இறைவனுடைய திருவடியை அடைவதற்கு உதவுவனவாகும்.

நம் உடம்பில் ஆறு ஆதாரநிலைகள் இருப்பதாகப் பெரியவர்கள் கூறுவார்கள். "ஆறு ஆதாரத்து அங்குச நிலையும்" என்பது ஔவையாரின் வாக்கு.

ஒவ்வொரு ஆதார நிலையிலும் இறைவனுடைய திரு உருவங்களை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு, படிப்படியாக மனத்தை உயர் நிலைக்கும், ஒன்றிய நிலைக்கும் கொண்டுசெல்ல வேண்டும். அவ்வாறு உயர்த்திக்கொண்டே சென்று பரம்பொருளில் ஒன்றுபடுவது ஆதார யோகம் என்று சொல்லப்படும்.

இந்த ஆதார இடங்களில் வைத்து வழிபடும் தெய்வங்கள் பஞ்சாட்சரமாகிய திரு ஐந்தெழுத்தின் அடையாளமாக வைத்து எண்ணத்தக்கவர் ஆவார்கள்.

இந்த ஆறு ஆதார இடங்களில் வைத்து வழிபடப்படும் தெய்வங்கள் யாவர்? ஆறு ஆதார இடங்கள் யாவை?

1. மூலாதாரம் — இந்த இடம் முதுகுத் தண்டின் அடிப்பகுதி ஆகும். மலக்கழிவு வாசலுக்கு இரண்டு அங்குலத்திற்கு மேலும், குறிக்கு இரண்டு அங்குலத்திற்குக் கீழும் உள்ள இடமாகும். இவ்விடத்திற்கு வடிவம் முக்கோண வடிவம். நான்கு இதழ்களை உடைய செந்தாமரை மலர் இவ்விடத்திற்கு

உரியது. இதற்கு — இவ்விடத்திற்கு—அதி தேவதை விநாயகர்.

2. சுவாதிஷ்டானம்-இந்த இடம் குறியின் அடிப்பகுதி ஆகும். இவ்விடத்திற்கு அறு கோண வடிவம் உரியது. ஆறு இதழ்த் தாமரை உரியது. இதற்கு அதிதேவதை பிரம்மன்.

3. மணிபூரகம்— இதற்குரிய இடம் கொப் பூழ். இவ்விடத்திற்கு உரியது மூன்று வட்ட வடிவம் ஆகும். அது பத்து இதழ்த் தாமரை உடையது. இவ்விடத்திற்குரிய அதிதேவதை திருமால்.

4. அநாகதம்-இதற்குரிய இடம் இருதயம் ஆகும். இவ்விடம் முக்கோண வடிவம் உடை யது. பன்னிரண்டு இதழ்த்தாமரை மலர் உரிமை உடையது. இவ்விடத்திற்குரிய முன் னவன்— அதிதேவதை – ருத்ரன் ஆவான்.

5. விசுத்தி—இதற்குரிய இடம் கண்டம். அதாவது கழுத்து. இவ்விடம் அறுகோண வடிவம் உடையது. பதினறு இதழ் வெண் டாமரை இவ்விடத்திற்கு உரியது. இதற் குரிய அதிதேவதை மகேஸ்வரன்.

6. ஆக்ஞை—இதற்குரிய இடம் புருவ நடுப்பகுதி ஆகும். இவ்விடத்திற்கு இரண்டு இதழ்ச் செந்தாமரை உரிமை உடையது. இதற்குரிய அதிதேவதை சதாசிவன்.

இந்த ஆறு ஆதாரங்களுக்கு மேல் உள்ள பிரம்மரந்தரத்தில் [ பிரம்மனல் உச்சியில் உரு வாக்கப்பட்ட துளை ] ஆயிரம் இதழ்களைக் கொண்ட தாமரை மலரில் சிவபரம்பொருள் வீற்றிருக்கும்.

இவ்வாறு சான்றோர்கள் கூறுவார்கள். இப்படிப்பட்ட ஆதார இடங்களில், அவ்வவற் றிற்குரிய அதிதேவதைகளை எழுந்தருளப் பண்ணி வழிபடத் தவறிவிட்டேனே என்று வருந்துகிறார் அதிவீரராமர்.

''வழிபாடும் அறியேனை''—மூர்த்திகளுக்குச் செய்யக் கூடிய வழிபாட்டையும் யான் அறிய வில்லையே என்று வருந்துகிறார் அதிவீரராமர்.

மக்கள் உயிர்க்குக் கோடை வெப்பத்தை ஆற்றுகின்ற மரநிழல் போல, பிறவியாகிய வெப்பத்தை ஆற்றுவது எம்பெருமான் திரு வடி நீழல் ஆகும். எம்பெருமான் திருவடி அடைவதற்கு, திருவருளைப் பெறுவதற்குப் பல வித வழிபாடுகளை நாம் செய்கின்றோம்.

உண்மையான பேரன்பு கொண்டு பக்தி யுடன் இறைவழிபாடு செய்தால், நினைக்கிற எல்லா வரங்களையும் இப்பிறவியில் அடைய லாம். அதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. கரிக்குருவிக்கு உபதேசம் செய்தருளிய சிவ பெருமான், பன்றிக்குட்டிகளின் பசியைப் போக்கித் திருவிளையாடல் புரிந்த பரமன் நம் துன்பத்தை நீக்காமல் இருப்பானு?

திரிநேத்திரங்களை உடைய சிவபெருமான் கரிக்குருவிமீது கிருபா கடாட்சம் வைத்து, இயமனை ஜயிக்கத் தக்க மிருத்யுஞ்சய மந் திரத்தை உபதேசிக்கவில்லையா! ஆகவே வழி பாட்டில் உண்மையான அன்பும், ஈடுபாடும் இருக்குமானல் இறைவனிடத்து வேண்டி யதைப் பெறலாம்; அவனே அருளுவான்.

கைகளைச் சிரத்தின்மீது குவித்து, கைகளும் கால்களும் தம்பித்து, கண்களில் ஆனந்த பாஷ் பம் சொரிய, பரமானந்த வெள்ளத்தில் அழுந்தி, மொழிகள் தடுமாற வழிபாடு செய் வது உண்மையான வழிபாடு ஆகும்.

பஞ்சாமிர்தம், பஞ்சகவ்வியம் (நறுமணம் கமழும் ஐந்து கனிகள்), சிவந்த தேன், சந்தனக் குழம்பு, மலர் பெய்த குளிர்ந்த நீர் இவற்றல் இறைவனுடைய திருமேனிக்கு அபிஷேகம் செய்து அழகிய வெண்ணிறப் பட்டாடை, பச் சைக் கற்பூரம் கலந்த சந்தனக் குழம்பு, மல் லிகை போன்ற வெண்ணிற மலர்மாலை இவற் றைச் சாத்தி வழிபாடு செய்வதும் இறைவ னுக்கு உகந்த வழிபாடாகவே பெரியோர்கள் சொல்லுவார்கள்.

காசி முதலிய க்ஷேத்திரங்களில் வசித்து அனுஷ்டிக்கக் கூடிய விரதங்களைக் காட்டிலும், சோமசுந்தரப் பெருமானுக்குரிய சோமவாரத் தில், சோமவாரவிரதம் இருந்து வழிபாடு செய் வதும் சிறந்த வழிபாடு ஆகும்.

உதய காலத்தில், ஆசிரியன் சொன்ன பிர காரம் நின்று, நித்திய கருமங்களை முடித்து, உச்சிக்காலம் முதல் மாலைக்காலம் வரை சிவ புராணம் கேட்டு, மாலைக் காலம் தொடங்கி நான்கு ஜாமங்களிலும் சிவபெருமானைப் பூஜித்து, பூஜை முடிவில் மூலமந்திரம் நூற் றெட்டில் நூற்றெட்டுதரம் ஆகுதி செய்து முடிப்பதும் சிவனுக்குப் பிரியமான வழிபாடு

ஆகும்.

இத்தகைய வழிபாடுகள் எல்லாம் அதிவீர ராமருக்குத் தெரியாதவையா? நன்கு அறிந்தவரே ஆவார். இருப்பினும் உலகியல் கருதி நம் போன்றவருக்குக் கூறுவதாகக் கொள்ள வேண்டும்.

சிவன் அவன் சிந்தையில் வீற்றிருந்த காரணத்தால், அவன் அருளாலே அவன் திருவடிகளை வணங்கும் பேறு பெற்றவர். "எம்பெருமானைப் போற்றிப் பரவி இந்திராதி பதவிகளைப் பெற்றவர்களைப் போல, உன்னை வழிபட்டால் எத்தகைய பதவிகள் கிடைக்கும் என்பதை உணரமாட்டாதவன் ஆனேன்" என்று வருந்துகின்றார்.

"பதம் கடந்த உண்மைப் பொருளும் அறியேனை"—வழிபாடு செய்வதால் கைகூடக் கூடிய பதவிகளைக் கடந்து நின்ற பெருநிலையை அறியாதவன் நான் என்று வருந்துகின்றார்.

பொய் கூறாமல் இருத்தல், பிறர்க்குத் தீங்கு செய்யாமல் இருத்தல், மற்றவர்களுடைய பொருள்களுக்கு ஆசைப்படாமை, காமப் பெண்டிர் வசப்படாதிருத்தல் முதலிய நற்பண்புகளைக்கொண்டு இயம நெறியைக் கடைப்பிடித்தவர் அவர்.

கோபம் கொள்ளாமை, பொறுமை, இரக்கம், மனத்திருப்தி, வழிபாடு செய்தல், குருவின் மொழிகளைப் போற்றுதல், அடியார்களின் மொழிகளை அன்போடு கேட்டல் ஆகியவற்றை நாளும் மேற்கொண்டு ஒழுகுகிற நியம நெறியைக் கைக்கொண்டவர் அவர்.

சரியை,கிரியை, யோகம் முதலானநெறிகளைப் பொய்க்காது, இடையறாது கைக்கொண்டதன் பயனாகச் சாலோகம், சாமீபம், சாரூபம் சாயுச்சியம் ஆகியபெறுதற்கரியபேறுகள்கிடைக்கும்.

சரியை, கிரியை, யோகம் என்னும் மூவகைத் தவத்தையும் செய்து, அவற்றின் வழியாக, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் ஆகிய பேறுகளை அனுபவித்ததன் மூலமாக ஞானம் கிட்டும்.

ஞானம் என்றால் என்ன? இறைவனே குருவாக எழுந்தருளி அருள் உரை வழங்கி ஆட்கொள்ளுவதாகும்.

இம்மாதிரியான பெரும் பதவிகள், இப்பதவிகளைக் கடந்த முக்தி நெறி ஆகியவற்றை ஏழையாகிய அடியேன் சிறிதும் உணராமல் போய் விட்டேனே என நெஞ்சம் கலங்குகிறார் அவர்.

"ஆண்ட குரவன் ஆவானை" என முந்தின பாடலில் குறிப்பிடுகிறார் அவர். எனவே, எம்பெருமான், அருளாளன் சிவபெருமான், ஞான குருவாக எழுந்தருளிவந்து ஆட்கொண்டு அருள் புரிந்தான் என்பது தெரிகிறது.

"தெவிட்டா அருள் புரிந்தான்" எனவும் அதிவீரராமர் குறிப்பிடுகிறார். தெவிட்டாதிருக்க அக்குருமூர்த்தி அருள்பாலித்தான் எனச் சுட்டிக் கூறுவதால், அப்பெருந்தகை குருவருளைப் பெற்றது புலனாகிறது.

"கருவா புரியான் வெளிப்படுத்திக் காட்சி கொடுத்து நின்றானே" என்றும் கூறுவதால் பிறைமௌலிப் பெருமான் காட்சி கொடுத்து, திருமேனி காட்டி அருள் புரிந்ததும் தெளிவாகிறது.

"இன்று உன் அடியாருடன் கூட எண்ணம் புரிந்த அருள் நன்று"—இப்போது, 'உம்முடைய அடியார்களுடன் கூடி வாழ்வதற்குத் தேவரீர் திருவுள்ளத்தில் எண்ணம் கொண்டருளிய திருவருள் நன்றாக இருந்தது' — என்கிறார்.

'ஒன்றுக்கும் பற்றாத எளியேனைப் பக்குவம் பெற்ற உன் அடியார்களுடன் இணைந்து வாழ்வதற்குத் திருவுள்ளம் பற்றினாய்' என வியக்கின்றார்.

"நாடகத்தால் உன் அடியார் போல் நான் நடித்து, வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்" என்று மணிவாசகப் பெருமான் கூறுவதும் இங்கே கருதத் தக்கது.

கடவுளை நம்பினோர் கைவிடப்படார் அல்லவா! பற்று அற்றான் பாதமலரைப் பற்றிய காரணத்தால், அவ்விறைவனுடைய திருவருள் பதிவு அதிவீரராமருடைய உள்ளத்திலே ஏற்பட்டது.

நல்லவர்களுடன் சேர்ந்து வாழ்வதே உண்மையான வாழ்வாகும். அத்தகைய உண்மையான வாழ்வைச் சிவபெருமான், அதிவீரராம பாண்டியருக்கு நல்ல அடியார் கூட்டத்துடன், மெய்த்தொண்டர் குழாத்துடன் கூட்டுவித்ததன் மூலமாக அளித்தருளினர்.

---

# அறிவின் படித்தரங்கள்

(சிவத்தொண்டன்)

**அறிவு என்பதன் விளக்கம்**

ஓர் அணுவினுலான சிற்றுயிர் முதல் ஆறறிவு படைத்த மனிதன் ஈருக அறிவு என்பது பல்வேறு நிலைகளில் பல்வேறு படித்தரங்களாகப் பரிணமிக்கும். பாக்டீரியாக்களைத் தின்றும், தானே இரண்டாகப் பிரிந்து இனவிருத்திசெய்தும் தனது குறுகிய வாழ்வை முடித்துக் கொள்கிறது சிற்றணு. அதன் வாழ்வில் அதுசெய்வது இவை இரண்டே. மாருக மனிதனே 'தான் ஓர் ஆன்மா; கனிந்த பழம் இற்றுப்போவது போல இந்த உடலை உகுத்துவிட வேண்டும்; பேரான்மாவில் தான் இரண்டற இணைதலே தன் வாழ்வின் முடிந்த முடிபு, என்று உணர்ந்து செயலாற்றும் விவேகம் படைத்தவன். இந்த முதல் நிலைக்கும், முடிந்த நிலைக்கும் இடையே அறிவில் பலவகைப் படித்தரங்கள் உள்ளன. காணல், கேட்டல், சுவைத்தல், முகர்தல் என்ற புலன் உணர்வுகளையும், பசி, தாகம், வலி, பாலுணர்ச்சி, இயங்குதல், ஓய்வுபெறுதல் என்பனபோன்று உடலின் உள்உறுப்புக்களில் தோன்றும் உணர்ச்சிகளையும், பயம், வெறுப்பு, வேதனை, திருப்தி, முன் எச்சரிக்கை முதலிய வெளிப்பாடுகளையும், நடப்பன, ஊர்வன, பறப்பனவாகிய சகலஉயிர்களும் வெவ்வேறு அளவுகளில்பெற்றுள்ளன. அவை தம்மைப்பற்றியும், தம் சுற்றுச் சூழ்நிலைபற்றியும் உடலின் தோல், தசை முதலியஅங்கங்களின் துணையால்அறிந்து கொள்கின்றன. தம் தேவைகளுக்கும், வெளிப்பாடுகளுக்கும் ஏற்ப அதே அங்கங்களைப் பயன்படுத்துகின்றன. எப்படியெனில், பசித்த மாடு வாயால் புல்லைத் தின்னும்; பயந்த மாடு கொம்பால் எதிரியை விரட்டும். இப்படித் தனது நிலைக்கும், தனது சூழலுக்கும் ஏற்றவாறு நடந்துகொள்ளத் தெரிந்து வைத்திருப்பதையே நாம் 'அறிவு' என்ற சொல்லால் குறிக்கின்ருேம்.

**அறிவின் வகைகள்**

ஐந்தறிவு படைத்த உயிர்கள் தமக்கு என்ன தேவைப்படுகிறது, எது தேவைப்படுவதில்லை எனவும், எது தமக்கு வேண்டியது, எது வேண்டாதது எனவும், எந்த நிலையில் தாம் எதைச் செய்வது சாத்தியம், எதைச் செய்வது கூடாது எனவும் நன்கு தெரிந்து வைத்திருக்கின்றன. ஓர் எடுத்துக்காட்டினுல் இதனை விளக்குவோம். ஒரு முதலை தனது பசிக்கு ஆடு, மாடு போன்ற உருவத்தில் உடல் தேவைப்படுகிறது எனவும், செடி, கொடி, மரங்களாகிய உயிர்கள் தனக்கு எவ்விதத்திலும் தேவைப்படுவதில்லை எனவும் புரிந்து கொண்டுள்ளது. அது தனக்கு வேண்டியது நீர்நிலை, வேண்டாதது அல்லது ஒவ்வாததுபாலை நிலம் எனவும் அறிந்துள்ளது. தன் இனத்தைப் பெருக்குவதற்காக நீர்நிலையை விட்டு வெளியே வந்து சுடுமணலில் குழிபறித்து முட்டைகள் இட்டு மூடி மறைப்பது சாத்தியம் எனவும், நிலத்தில் நின்று பலம் பொருந்திய விலங்குகளுடன் தான் போரிடுவது கூடாது எனவும் நன்கு தெரிந்து வைத்திருக்கிறது. இந்த அடிப்படை அறிவும் அதற்கு இல்லையானுல் அது அழிந்துபட்டுப்போம். இவ்விதம் காலம், சூழ்நிலை ஆகியவற்றைத் தெரிந்து கொண்டு அனுசரித்துப்போகாத எத்தனையோ வகை உயிரினங்கள் ஆழி சூழ்ந்த இவ்வுலகில் அழிந்துபோயிருக்கின்றன. கொசுவும், கரப்பானும் என்றும் இருந்து வருகின்றன. ஆனுல் மனிதனை விட பல மடங்கு உடல் வலிமை பெற்றிருந்த 'டினேசார்' என்ற விலங்கு அழிந்துபோய்ப் பல ஆயிரம் வருஷங்களாகி விட்டன. தாவர ஜங்கமமாகிய உயிர்கள் குஞ்சு பொரிப்பன, பாலூட்டிகள் என்றெல்லாம் உடல் அமைப்புக்கும், வாழ்க்கைத் தரத்துக்கும் ஏற்ப மனிதனுல் பலவகை இனங்களாகத் தொகுக்கப்பட்டாலும் அடிப்படை அறிவு என்பது அவை அனைத்துக்கும் ஒரே வகையானதுதான். உணவு, உறையுள், உறக்கம், உற்பத்தி, உயிர்ப் பாதுகாப்பு ஆகியவற்றிற்காக உயிரினங்கள் சோதனை, விளையாட்டு, போராட்டம், உயிர்க்கொலை ஆகிய பயிற்சிகளில் உயிர்வாழும் பரியந்தம் ஈடுபடுகின்றன. இவையே அவைகளுடைய அறிவின் முடிந்த முடிபாகும்.

மனிதனே இவற்றில் எல்லாம் ஈடுபட்டா

லும், இவையே அவனது அடிப்படை லட்சியங்கள் ஆகா. தனது நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக மட்டுமே அவன் இவற்றைக் கையாளலாம். உதாரணமாக, வயிறு பசித்தால் மிருகங்கள் இரைதின்கின்றன. மனிதனோ

"உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பினையானிருந்து ஓம்புகின்றேனே"

என்று புரிந்துகொண்டு செயலாற்றுகின்றான். இந்த நுணுக்கமான வேறுபாட்டைத் தெரிந்து கொள்ளாமல் முதலில் சொன்ன மிருகங்களின் நிலையிலேயே நம்மில் பெரும்பாலோர் வாழ்ந்து வருகிறோம். மனித இனம் இன்று படுகின்ற எல்லாவிதமான வேதனைகளுக்கும் முதற்காரணமும், முழுப்பொறுப்பும் இந்த அறியாமையே ஆகும். பகுத்தறிவு இருந்தும் அதனைப்பயன்படுத்தத்தெரியாத அல்லது பயன்படுத்த விரும்பாத விசித்திரப் பிராணி இந்த மனிதன் என்பவன். பகுத்தறிவு என்றால் என்ன? (தொடரும்)

# பழனியாண்டவர் மலையில் ஐக்கிய வழிபாடு

திரு. S. விசுவநாதன் அவர்கள் சத்கைங்கர்யநிதியிலிருந்து ஆண்டுதோறும் பழனியில் ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமிக்கு அபிஷேக ஆராதனையும், பக்தர்களுக்குச் சமாராதனையும் தபோவனம் செய்து வருகின்றது.

இவ்வாண்டு டிசம்பர் மாதம் 10ஆம் தேதி சனிக்கிழமை யன்று திருப்பராய்த்துறை ஸ்ரீ விவேகானந்த குருகுலப்பள்ளி எட்டாம் வகுப்பு மாணவர்களையும், தபோவனம் நடத்தும் திருச்சி கைலாசபுரத்திலுள்ள பாய்லர் பிளாண்ட் நடுநிலைப்பள்ளி ஆறு, ஏழு, எட்டு வகுப்பு மாணவ மாணவியர்களையும், திருவேடகம் விவேகானந்த மேல்நிலைப்பள்ளி மாணவர்களையும் பழனிக்கு அழைத்துச் சென்று ஸ்ரீ தண்டாயுதபாணி சந்நிதி முன் ஐக்கிய வழிபாடு செய்ய ஏற்பாடாகியுள்ளது. அன்று உச்சிக்காலப் பூஜைக்குப் பின் பழனி அடிவாரத்திலுள்ள சங்கரண்டாம்பாளையம் பட்டக்காரர் மடத்தில் பக்தர்களுக்கு நண்பகல் உணவு வழங்கப்படும். அன்று நிகழும் ஐக்கிய வழிபாட்டிலும், சமாராதனையிலும் கலந்து கொள்ளுமாறு அன்பர்களும், தாய்மார்களும் அன்புடன் அழைக்கப்படுகிறார்கள். அன்று காலை 9 மணிக்குக் கந்தர் அனுபூதி ஓதிக்கொண்டு மாணவர்கள் மலைமீது ஏறுவார்கள். பகல் 10-30 மணியிலிருந்து 11-30 மணிவரை பழனியாண்டவர் சந்நிதியில் ஐக்கிய வழிபாடு நிகழும்.

# செய்திகள்

**நிகழ்பவை**

நவம்பர் மாதம் 20ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை திருவண்ணாமலை கார்த்திகைத் தீபமாகும். அன்று திருவண்ணாமலையில் காலை 6-00 மணிக்குப் பரணி தீபம் ஏற்றியான பிறகு திருவண்ணாமலைக் கோயில் கிழக்கோபுரத்திலின்று திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனச் சந்நியாசிகள் நாமபஜனையுடன் கிரிப்பிரதக்ஷிணம் செய்வார்கள். வழியில் வசதியான இடத்தில் சிறு அந்தர்யோக நிகழ்ச்சியும் நிகழும். அன்பர்களும், தாய்மார்களும் கிரிப்பிரதக்ஷிணத்திலும், அந்தர்யோக நிகழ்ச்சியிலும் கலந்துகொள்ளலாம்.

20—11—83 அன்று சேலம் ஜில்லா மேச்சேரியில் நிகழும் சன்மார்க்க சங்க ஆண்டு விழாவில் ஸ்ரீமத் துருவானந்த சுவாமிகள் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றுவார்கள்.

11—12—83 ஞாயிற்றுக்கிழமையன்று சேலம் ஜில்லா மேட்டூர் தாலுகா சின்னத்தண்டா ஸ்ரீ ராமகிருஷ்ண–குருகுலப் பள்ளியில் நிகழும் ஆண்டு விழாவில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் கலந்துகொண்டு பேசுவார்கள்.

16–12–83 வெள்ளிக்கிழமையன்று வைகுண்ட ஏகாதசியை முன்னிட்டு ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுலமாணவர்கள் உபவாசமிருந்து இருபத்து நான்கு மணிநேரம் அகண்ட நாமபஜனையும், ஸ்ரீமத் பகவத்கீதை முழுவதும் ஒரு முறை பாராயணமும் செய்வார்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 8-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரி | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, | 4-50 |
| ராஜயோக விளக்கம் | ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4-00 |
| சகோதரி நிவேதிதை | ... | 3-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | ... | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | ... | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| **தாயுமானவர் இயற்றிய** | | |
| கருணைகரக் கடவுள் | விரிவுரை ... | 3-50 |
| பரிபூரணானந்தம் | ஷை ... | 3-00 |
| சின்மயானந்த குரு | ஷை ... | 3-00 |
| ஆனந்தமானபரம் | ஷை ... | 3-00 |
| சுகவாரி | ஷை ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் | ஷை ... | 3-00 |
| எங்கும்நிறைகின்றபொருள் | ஷை ... | 2-50 |
| மலைவளர் காதலி | ஷை ... | 1-50 |
| பரசிவ வணக்கம் | ஷை ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| அறம் வளர்த்த நம்பி (நாடகம்) | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் | ஷை ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ஷை ... | 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் | ஷை ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி | ஷை ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| மாணாக்கன் | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| சைவன் யார்? | ..., | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |
| வாலி மோட்சம் (நாடகம்) | ... | 1-00 |

| | | |
|---|---|---|
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) | ... | 1-00 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... | 1-00 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... | 1-00 |
| தபோபலன் (நாடகம்) | ... | 1-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவமதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| *சக்தி தத்துவம் | ... | 0 90 |
| *சூரியநாராயணன் | ... | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | ... | 0-75 |
| *ஆலய வழிபாடு | ... | 0-75 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொருபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக்கடவுள் | ... | 0-50 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| கந்தர் அநுபூதி | ... | 0 25 |
| The Bhagavad Gita (11th Imp.) | ... | 24-00 |
| Tirukkural (with plastic cover) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna lives Vedanda | ... | 8-00 |
| Mahaveer Sri Hanuman | ... | 7-75 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 6-00 |
| Man Making Message | ... | 7-00 |
| Ramayana (with plastic cover) | ... | 7-00 |
| Mahabharata ,, | ... | 6-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | ... | 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity ,, | ... | 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| *Introducing the Gita | ... | 2-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The student | ... | 1-25 |
| The Teacher | ... | 1-00 |
| The School | ... | 1-00 |
| The Nursery School | .. | 1-00 |

# சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

பொருளாதாரத் துறையில் எந்நிலையில் உள்ளவர்களுக்கும் தர்ம சக்கரம் கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சகாயசந்தா, சாதாரணசந்தா, டிபாசிட் சந்தா, சர்க்கார் நூல் நிலையங்களுக்கு இலவசமாக அனுப்புதல் ஆகிய முறைகளை நடைமுறையில் வைத்துள்ளோம்.

இன்றைக்குச் சமுதாயத்தில் மக்களுக்கு மனதைத் திருத்தி அமைக்கும் கருத்துக்கள் வழங்கப்படுவது அவசியமாகிறது. மக்கள் மனதிலுள்ள நல்லுணர்வுகளைத் தூண்டி விடவும், மக்களைப் பக்தி வழியில் நடாத்திச் செல்வதற்கும் தர்ம சக்கரம் மக்களில் பல பேருக்குக் கிடைக்க வேண்டும் என்று கருதுகிறோம். தர்ம சக்கர சந்தாதாரர்களின் எண்ணிக்கை அதிகமாகின்றவளவும், தர்ம சக்கரத்தைப் படிக்கின்றவர்களுடைய தொகை அதிகரிக்கின்றவளவும் மக்கள் மனதில் நல்ல திருப்பம் உண்டாகும்.

தை மாதம் தர்ம சக்கரத்தின் ஆண்டுத் துவக்கமாகும். இந்தச் சந்தர்ப்பத்தில் தர்ம சக்கர சந்தாதாரர்கள் புதிய சந்தாதாரர்களைச் சேர்ப்பதற்கும், ஆண்டுச் சந்தா முடிவுறும் சந்தாதாரர்களை மீண்டும் புதுப்பிப்பதற்கும் முயல்வார்களானால் அது ஒரு சிறந்த ஞான கைங்கர்யமாகும்.

தர்ம சக்கர சந்தாதாரர்கள் ஒவ்வொருவரும் கார்த்திகை, மார்கழி மாதங்களுக்குள் குறைந்தது மூன்று புதிய சந்தாதாரர்களையாவது தர்ம சக்கரத்துக்குச் சேர்த்துத் தருவது என்று உறுதிசெய்துகொண்டு செயல்படுவார்களானால் தர்ம சக்கர சந்தாதாரர்களின் எண்ணிக்கை சுலபமாக உயர்ந்துவிடும். எவ்வளவுக்கெவ்வளவு புதிய சந்தாதாரர்களைச் சேர்க்கிறீர்களோ அவ்வளவுக்கவ்வளவு ஆன்மீகத்துறையில் நீங்கள் நற்பணி செய்தவர்களாகிறீர்கள். சந்தாதாரர்களின் விலாசங்களை எழுதிச் சந்தாத் தொகையையும் அனுப்பிவைத்தால் அவர்களைச் சந்தாதாரர்களாகப் பதிவு செய்துகொண்டு மாதா மாதம் முறையாக அவர்களுக்குத் தர்ம சக்கரம் அனுப்பி வைக்கப்படும். தர்ம சக்கரம் சந்தாச் சேர்க்கும் பணியில் ஊக்கம் காட்டுமாறு சந்தாதாரர்கள் வேண்டிக்கொள்ளப்படுகிறார்கள்.

தர்ம சக்கரத்தில் வரும் விஷயங்கள் நிரந்தரமான தத்துவ ஆராய்ச்சிகளாக இருக்கின்றன. எப்பொழுது வேண்டுமென்றாலும் திரும்பவும் வாசிக்கக் கூடிய ஒரு நூலாக இது அமைந்துள்ளது. எனவே ஓர் ஆண்டின் பன்னிரண்டு தர்ம சக்கர இதழ்களையும் பொருளடக்கத்துடன் பைண்டு செய்து வைத்துக்கொண்டால் அது ஒரு நல்ல புத்தகமாக அமையும். நாம் படிப்பதற்கும், மற்றவர்களுக்குப் படிக்கத் தருவதற்கும் பைண்டு செய்த நூல் பயன்படும்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**
*திருப்பராய்த்துறை-639 115*
*திருச்சி ஜில்லா.*

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.